# மாநில சுயாட்சி ஏன்?

ஏ. பாலசுப்ரமணியம்,
செயலாளர்,
தமிழ் மாநிலக் குழு,
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்).




வெளியீடு:
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்),
தமிழ் மாநிலக் குழு,
13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி,
மதுரை — 1.

எங்கு பார்த்தாலும் ''மாநில சுயாட்சி'' என்பதைப் பற்றி பேச்சாக இருக்கிறது. பிரதமர் இந்திரா இதற்கென தமிழகம் வந்து, மதுரையில் நடந்த மாநில காங்கிரஸ் மாநாட்டில் இந்தச் சொற்றொடரே ஆபத்தானது என்று அலறிவிட்டுப் போயுள்ளார்கள். அம்மையார் ஏற்கனவே பலதடவைகளில் நாடாளுமன்றத்திலேயே தனது கருத்தைத் தெளிவாக்கியுள்ளார். இப்பொழுது சந்தேகத்துக்கு இடமின்றி, தமிழகத்திற்கே விஜயம் செய்து, வெட்டு ஒன்று — துண்டு ரெண்டு என்று தெளிவாக்கியுள்ளார்கள். இருந்தாலும் நயது கலைஞருக்கு இன்னும் அம்மையாரிடம் அதிக நம்பிக்கை இருக்கிறது மேலும் சந்தித்து, வாய்ப்பு அளிக்கப்பட்டால் விளக்கம்தர சித்தமாய் இருக்கிறாராம்! இடுப்பிலே துண்டைக் கட்டிக்கொண்டு தெண்டம் சமர்ப்பிப்பார் போல் தோன்றுகிறது! அவருக்கு ''ஜனநாயகத் தொட்டிலிலே'' தவழ்ந்து வளர்ந்த இந்திராவிடம் அவ்வளவு நம்பிக்கை.

அவரது கண்ணோட்டத்தில் அந்த நம்பிக்கையும் நியாயம் தானே! அண்மையில் புதுடில்லிக்குச் சென்று இந்தியப் பேரரசின் 'முற்போக்கு கொள்கைகளுக்கு' எப்பொழுதும் ஆதரவு தருவோம்'' என்று பகிரங்கமாக பறைசாற்றிவிட்டு வந்தாரல்லவா? அப்படிப் பட்ட ''முற்போக்கு கொள்கைகளை'' அமுல்படுத்திக்கொண்டிருக்கும். 'ஜனநாயகத் தொட்டிலில் வளர்ந்த' தேவியிடம் இவர் வேண்டி நிற்கும் மாநில சுயாட்சி என்ற பிரசாதம் கிடைக்கும் என்று அவர் நம்புவதில் நமக்கு வியப்பு இருக்கத் தேவையில்லை. ''முற்போக்கு கூட்டணி'' வாடை இன்னும் அவரை விடவில்லை போலும்!

# ''மாநில சுயாட்சி'', தேசத் துரோகமாம்

மதுரையிலே எழுந்தருளிய தேவியின் ''அருள் வாக்கு'' இப்படி இருக்க, அவரது பக்தகோடிகளின் பதறலோ பயங்கரமாக இருக்கிறது: ''மாநில சுயாட்சியாவது, மண்ணாங்கட்டியாவது; அந்தச் சொல்லே கூடாது. அந்தச் சொல்லுக்குள்ளே துரோகம் — தேசத் துரோகம் இருக்கிறது. அது நாட்டைத் துண்டாடும் சதி'' என்றெல்லாம் கதறுகிறார்கள். மதுரை மாநாட்டில் நிறைவேற்றிய அரசியல் தீர்மானத்தில் ''தி மு க. வின். மாநில சுயாட்சிக் கோரிக்கை தனிநாடு பிரிவினையில் கொண்டுபோய்விடும் என்று நாம் ஐயம்கொள்ள வேண்டியிருக்கிறது; அச்சமும் கொள்ள வேண்டியதிருக்கிறது'' என்று கூறுகிறது. ''தமிழ் மக்களின் நலன்களை தேசீயப் பெருவெள்ளத்தில் இருந்து தவறவிடாமல் காப்பாற்ற வேண்டிய பொறுப்பை'' அவர்கள் மேற்

கொள்கிறார்களாம். எனவே, இந்த ஆபத்திலிருந்து தமிழகத்தைக் காக்க கச்சையை வரிந்துகட்டி ஆர்ப்பரிக்கிறார்கள். "மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுகள் மாநில சுயாட்சிக்காக நிற்கிறார்கள். இந்த "பயங்கரம்" உங்களுக்குத்தெரியுமா? எனவே, நீங்கள் இதை உடனடியாக விட்டுவிடுங்கள்" என்று நாடாளுமன்றத்தில் சி. சுப்பிரமணியம் தி. மு. க. வினரை எச்சரித்து உபதேசித்தார்.

# சங்கர் ரே பேச்சு

மேற்கு வங்கத்தில் ஆயுதம்தரித்த குண்டர்களைக் கொண்டு தேர்தலில் வெற்றிபெற்ற இண்டிகேட்டின் குண்டர் தலைவர் சித்தார்த்த சங்கர் ரே, மதுரை மாநாட்டில் தி. மு. க. வை எச்சரித்தார். மார்க்சிஸ்டுகள் "அபாயகரமான மனைவி" என்றார். சொந்த அனுபவத்தில் இருந்து சொல்வதாகச் கனைத்தார். என்றைக்கு இவர் கட்சிக்கும் மார்க்சிஸ்டுகளுக்கும் உறவு இருந்தது? ஊரெல்லாம் இண்டிகேட் "முற்போக்குக் கட்சி" என்று டமாரமடித்த காலத்திலேயே, தி. மு க. வினரும் சேர்ந்து, முற்போக்குக் கூட்டணியில் இணைந்து நின்று, இண்டிகேட்டின் முற்போக்கு பற்றி முக்கி முக்கிக் கூப்பாடு போட்டபோதே, நாம் இந்தக் கட்சியை "சனியன்" என்றோம். இண்டியும் சிண்டியும் அடிப்படையில் பெருமுதலாளிகளின் கட்சிகள் என்றோம். பின் எப்பொழுது இண்டித் தலைவர் சித்தார்த்த சங்கர் ரே அவர்களுக்கு நம்மைப் பற்றி சொந்த அனுபவம் ஏற்பட்டிருக்க முடியும்? "அளந்துவிடுவோம் எவன் வந்து இப்படியெல்லாம் நம்மைக்கேட்கப் போகிறான்" என்ற திமிரிலே அவர் இப்படிப் பேசியிருக்க வேண்டும் அல்லது சொந்த வாழ்க்கையில் அவருக்கு அப்படி அனுபவமோ என்னமோ!— எதையோ நினைத்துக்கொண்டு எங்கேயோ பேசிவிட்டாரோ என்னமோ? யார் கண்டது?

# ராஜாவை விட ராஜ விசுவாசம்

இவர்கள் ஒரு புறம் இருக்க, நமது வலதுகளுக்கு தற்சமயம் "ஹிஸ்டீரியா" பிடித்துள்ளமாதிரி தெரிகிறது திரு. கல்யாணசுந்தரம் இண்டிக்கேட்காரர்களைவிட உரக்கக் கூப்பாடு போடுகிறார். "மாநில சுயாட்சி என்ற பேச்சே கூடாது" என்கிறார். அவர்களது அகில இந்தியச் செயலாளர் திரு இராஜேஸ்வரராவ் அவர்கள் அனைவரையும் மிஞ்சி விட்டார். இந்த கோரிக்கையை எழுப்பும் தி. மு. க. தலைவர் "அமெரிக்காவின் ஏஜெண்டு" என்று அடித்துக் கூறுகிறார்....ஒன்றாக இருந்த காலத்திலும் கம்யூனிஸ்ட் கட்சி மாநில சுயாட்சியை வற்புறுத்தி வந்தது என்பது இந்த இரண்டு தலைவர்களுக்கும் தெரியும் கம்யூனிஸ்ட் கட்சியின் வரலாற்றில் ஒரு குறிப்பிட்ட காலம் வரை பிரிந்து போகும் உரிமை உள்ளிட்ட சுய நிர்ணய

உரிமை இந்தியாவின் உள்ள தேசிய இனங்களுக்கு உண்டு என்று கம்யூனிஸ்ட் கட்சி கூறி வந்ததையும் இத் தலைவர்கள் மறந்திருக்க மாட்டார்கள். பின்னர் அது தேவையில்லை என்றும் மாநில சுயாட்சி என்பதே போதுமானது என்றும் கட்சி அதைக் கைவிட்டது.

ஆனால், இன்று என்னமோ, திடீர் என்று அலறிப் புடைக்கிறார்கள். மாநில சுயாட்சி என்று பேசவே கூடாது என்கிறார்கள். இந்திய ஒருமைப்பாட்டுக்கு அபாயம் என்கின்றனர்; ''ராஜாவைவிட ராஜ விசுவாசம்'' காட்டி இண்டிகேட் காரர்களை விட இந்தக் கோரிக்கையை எதிர்ப்பதில் அதிக தீவிரம் காட்டுகின்றனர். இதன் மூலமும், இண்டிகேட்டுக்குச் செய்து வரும் இன்னபிற சேவைகள் மூலமும் இண்டிகேட்டின் மதுரை மாநாட்டு அறிக்கையிலே பாராட்டுப் பெற்றுள்ளனர்!

இந்தப் பேத்தல்களும் ஜன்னிப் பிதற்றல்களும் இருக்கட்டும். நாம் விஷயத்துக்குள்ளே இறங்குவோம்.

# கோரிக்கையின் தோற்றம்

மாநில சுயாட்சி என்பது நமது நாட்டில் புதிதாக தோன்றியுள்ள ஒரு கோரிக்கையுமல்ல. இது, திராவிடக் கழக, அல்லது திராவிட முன்னேற்றக் கழக இயக்கம் பெற்றுவிட்ட பிள்ளையல்ல. முதலில் இந்த வரலாற்று உண்மையை நாம் தெளிவாக மனதில் இருத்திக் கொள்வதவசியம். இந்த உண்மை பலருக்குத் தெரியாது 1947க்குப் பிந்திய தலைமுறையினரில் பலருக்கு—அவர்கள் எந்தக் கட்சியில் இருந்தாலும்—இந்த உண்மை தெரியாது.

நாட்டுப் பிரிவினையை வற்புறுத்தி வந்த தி.மு.க., இன்று இக் கோரிக்கையை ஆதரிப்பதனாலேயே இது பிரிவினை வாதிகள் தோற்றுவித்த கோரிக்கை என்ற தவறான எண்ணம் பரவ இடமிருக்கிறது. இப்படிப்பட்ட தவறான எண்ணத்தை பரப்புவதில் அக்கறை உள்ள அரசியல் அயோக்கியர்களும் ஏராளமாக இருக்கின்றனர். அதனால் தான், எடுத்த எடுப்பிலேயே இதனைத் தெளிவாக்கி விடுவது அவசியம்.

திராவிடக் கழகம் தோன்றியது 1940-ல். திராவிட முன்னேற்றக்கழகம் தோன்றியது 1949-ல். இதற்கெல்லாம் முன்னரே, நமது நாட்டில் தேசீய விடுதலை இயக்கம் எழுப்பிய கோரிக்கை—முன் வைத்த கோஷம் 'மாநிலசுயாட்சி' என்பது. இந்தியதேசியகாங்கிரசின் அடிப்படைக் கொள்கைகளில் ஒன்றாக இருந்தது மாநில சுயாட்சி என்பது. இந்த விஷயம் இன்றைய ''இளைஞர் காங்கிரசுக்கு''த் தெரியாமல் இருக்கும். ''முதிர்ந்த'' இந்திராவுக்கும், சி. சுப்பிரமணியத்துக்கும்தெரியாததல்ல. நன்றாகத்தெரியும். தெரிந்திருந்தும், வேண்டும்

என்றே மூடி மறைக்கிறார்கள்—காந்தி வழி வந்த இந்த சத்திய சீலர்கள்.

1935-ஆம் வருட இந்திய அரசியல் சட்டம் என்ற ஒன்றை பிரிட்டிஷ் எஜமானர்கள் இந்தியாவின் மீது திணித்தார்கள்.

இந்திய சுதந்திரத்தை ஏற்க பிரிட்டிஷார் மறுத்தனர். எப்பொழுதும் போல் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாகவே இந்தியா அடிமைப்பட்டுக் கிடக்க வேண்டும் என்று திட்டமிட்டனர். அப்படிப்பட்ட இந்தியாவில், சுதேசி மன்னர்கள் கைவசமிருந்த சமஸ்தானங்களை ஒதுக்கிவிட்டு, எஞ்சியுள்ள மாகாணங்களில் அற்ப சொற்ப அதிகாரங்களைக் கொண்ட மாநில சட்டமன்றங்களும் மாநில ஆட்சிகளும் அமையும் ஏற்பாட்டையும், டில்லியிலே குவியலான அதிகாரங்களைக் கொண்ட மத்திய ஆட்சியும்—பிரிட்டிஷ் வைஸ்ராயிக்கு உட்பட்ட மத்திய ஆட்சியும்—அமையும் ஏற்பாட்டையும் கொண்ட அரசியல் சட்டத்தை முன்வைத்தனர்.

அந்தச் சட்டத்தின் கீழ் மாகாணங்களில் தேர்தல்கள் நடந்தன. சுதேசி சமஸ்தானங்களில் தேர்தல்கள் நடக்கவில்லை. அங்கே இஷ்டப்பட்டு ராஜாக்கள் வைத்ததுதான் சட்டம். அவர்களுக்கு பிரிட்டிஷ் எஜமான் சொன்னதுதான் சட்டம். 11 மாகாணங்களில் தேசிய காங்கிரஸ் வெற்றி பெற்றது. (அன்று இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சி பகிரங்கமாக இயங்க வாய்ப்பு இருக்கவில்லை, இரகசியமாகத்தான் செயல்பட்டு வந்தது. தேச விடுதலை இயக்கத்தில் தீவிரமாகப் பாங்கு கொண்டு வந்த காங்கிரஸ்காரர்களாகவே காட்சியளித்து வந்தனர் கம்யூனிஸ்டுகள்)

அந்தத் தேர்தல்களில் தேசிய காங்கிரசின் பிரதான கோஷம் என்னவாக இருந்தது? பிரிட்டிஷார் திணித்த அரசியல் சட்டத்தை எதிர்த்து பிரசாரம் நடத்தப்பட்டது. அந்தச் சட்டத்தின் எந்த அம்சத்தைக் குறிவைத்து தேசிய காங்கிரசின் பிரசாரம் தாக்கியது? மத்தியிலே அதிகாரக் குவியல் என்ற அம்சத்தைத்தான் தாக்கியது. ''மாநில சுயாட்சி, எஞ்சிய அதிகாரங்களும் மாநிலங்களுக்கே'' என்று தேசிய விடுதலை இயக்கம் முழக்கமிட்டது. அந்த முழக்கத்துடன்தான், பிரிட்டிஷாரின், அடிவருடிகளாக சென்னை மாநிலத்தில் அன்று இருந்த நீதிக் கட்சியினரை தேர்தல் களத்திலே முறியடித்தது காங்கிரஸ்.

அந்தக் காலத்தில் திராவிடக் கழகமும், அதிலிருந்து 1949-ல் தோன்றிய திராவிட முன்னேற்றக் கழகமும் நீதிக் கட்சியின் கருப்பையிலே இருந்தன. அவர்களுக்கும் தேசிய விடுதலை இயக்கத்துக்கும் சம்பந்தமிருக்கவில்லை. தேசிய சுதந்திரத்தை எதிர்த்து நின்ற நீதிக் கட்சிக்குள் அடங்கிக் கிடந்தனர். அவர்களுக்கும் மாநில

சுயாட்சி என்ற கோரிக்கையின் பிறப்புக்கும் எவ்வித சம்பந்தமும் இருக்கவில்லை என்பது இப்பொழுது விளங்கியிருக்கும்.

வளர்ச்சியடைந்த பல மொழிகளைக் கொண்ட இந்தியா, மொழிவழி அமையப் பெற்ற மாநிலங்களின் சமஷ்டியாகத்தான் (கூட்டாட்சி) இருக்க வேண்டும் என்பது அக்காலத்தில் காங்கிரசின் கொள்கை. அதற்குகந்தபடி, காங்கிரசின் ஸ்தாபன அமைப்பையே மொழிவழியாகத்தான் அமைத்தனர். அப்படி அமையும் இந்திய சமஷ்டியில் மொழிவழி மாநிலங்களுக்கே அதிக அதிகாரங்கள் இருக்க வேண்டும் என்றும், மத்தியில் குறைந்த அளவு அதிகாரங்கள் இருந்தால் போதும் என்றும் காங்கிரஸ் அன்று கருதியது. அதனால் தான் மாநிலங்களுக்கு சுயாட்சி வேண்டும் என்று காங்கிரஸ் முழங்கியது. அதுமட்டுமல்ல —

மத்திய சர்க்காருக்கு சில அதிகாரங்கள் ஒதுக்கப்படுகின்றன. சில அதிகாரங்கள் மாநிலங்களுக்கு என ஒதுக்கப்படுகின்றன. இவ்வாறு பட்டியல் போட்டு ஒதுக்கும் பொழுது, இந்த இரண்டு பட்டியலிலும் இடம் பெறாமல் போகக்கூடிய விஷயங்கள் இருக்கும் அல்லவா! நாட்டின் வளர்ச்சிப் போக்கில் புதிய புதிய நிகழ்ச்சிகள் ஏற்படும்: அவற்றைச் சமாளிக்க புதிய அதிகாரங்கள் தேவைப் படும். இவற்றைத்தான் "எஞ்சிய அதிகாரங்கள்" என்று கூறுகிறார் கள். மத்திய அரசுக்கு ஒதுக்கப்பட்ட அதிகாரப் பட்டியலிலோ, மாநிலங்களுக்கு ஒதுக்கப்பட்ட அதிகாரப் பட்டியலிலோ இடம் பெறாமல் அவை தயாரிக்கப்பட்ட சமயத்தில் இடம் பெறாமல் — இருந்த — அதிகாரங்களை எஞ்சிய அதிகாரங்கள் என்று அழைக்கிறார் கள். இந்த எஞ்சிய அதிகாரங்கள் மாநிலங்களுக்குத்தான் இருக்க வேண்டும்என்பதும் தேசிய காங்கிரசின் அக்காலத்துக்கோஷமாகும். இந்தகோஷங்களுடன் மக்களிடம் சென்று மக்களது பேராதரவைப் பெற்று 11 மாநிலங்களில் காங்கிரஸ் மாகாண சர்க்கார்களை அமைத்தது.

# "வெள்ளையனே வெளியேறு" என்ற 1942 ஆகஸ்ட் தீர்மானத்தில்

அடுத்து நாம் காங்கிரசின் வரலாற்றில் முக்கியமான இன்னொரு அத்தியாயத்துக்கு வருவோம். அதுதான் 1942 ஆகஸ்டு. உலக மகாயுத்தம் நடந்துகொண்டிருந்த காலம். ஹிட்லர், முசோலினி, டோஜோ தலைமையில் உலகம் முழுவதையும் விழுங்கி அடிமைகொள்ள பாசிசம் மூர்க்கத்தனமான உலகப்போரை நடத் திக்கொண்டிருந்த காலம். சோவியத் யூனியன் உள்ளிட்ட "நேச நாடுகள்" (முக்கியமாக சோவியத் யூனியன், பழைய சீனம், அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ்) ஓரணியில் நின்று, பாசிசத்தைத்

தடுத்து நிறுத்தும் புனிதப் போரில் ஈடுபட்டிருந்த காலம். அச்சமயத்தில் இந்தியாவுக்கு உடனடி சுதந்திரம் வழங்கவேண்டும் என்று காங்கிரஸ் தலைவர்கள் வற்புறுத்தினர். அவர்கள் யுத்த நெருக்கடியில் சிக்கி பெரும் சேதங்களை அடைந்துவரும் பிரிட்டனை, இந்தச் சமயத்தில் நெருக்கி சுதந்திரத்தைப் பெற்றுவிடலாம் என்று கணக்குப் போட்டனர். ஜப்பானது தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் பிரிட்டன், பர்மா, மலேயா, சிங்கப்பூர் அனைத்தையும் பறிகொடுத்துவிட்டு ''குண்டோட்டம் குதிரையோட்டமாக'' பின்வாங்கிக்கொண்டிருந்த நேரம். இந்த நேரத்தில் வெகுஜனப் போராட்டம் என்று மிரட்டினால் பிரிட்டன் பணிந்துவிடும் என கணக்கிட்டது காங்கிரஸ் தலைமை. உலக மக்கள் மத்தியில் நமது விடுதலை இயக்கத்தைப்பற்றி தவறான கருத்து ஏற்படும் என்று நாம்—கம்யூனிஸ்டுகள் எச்சரித்ததை காங்கிரஸ் தலைவர்கள் ஏற்கவில்லை. பாசிசத்தை எதிர்த்து நடைபெறும் உலகப் போரில் முற்போக்கு ஜனநாயக சக்திகளின் சார்பில் நின்று நேசநாடுகள் போராடிக் கொண்டிருக்கும்வேளை. இந்த அணியில்உள்ள பிரிட்டன், அமெரிக்கா போன்ற அரசுகள் ஏகாதிபத்திய அரசுகளாக இருந்த போதிலும், வரலாறு அவர்களை சோவியத் யூனியனுடன் இணைந்து நின்று, பாசிசத்தை எதிர்த்துப் போராடும் நிலையில் வைத்திருக்கிறது.

இந்த நேச நாடுகள் வெற்றி பெறுவது உலகத்துக்கு, மனித குலத்தின் எதிர்காலத்துக்கு அவசியம். இந்த வேளையில் இந்தியாவில், பிரிட்டனுக்கு எதிராக ஒரு வெகுஜனப் போராட்டம் ஆரம்பித்தால், உலக மக்களின் பல பகுதியினர் நம்மைப்பற்றி தவறாக எண்ணுவர். எல்லையில் வந்து நிற்கும் ஜப்பானுக்கு ஆதரவாக நிலைமை உருவாகவே நாம் இந்தக் கிளர்ச்சியை இந்தச் சமயத்தில் நடத்துகிறோம் என்று பிரிட்டிஷ்காரர்கள் பரப்பும் பொய்ப்பிரச்சாரம் எடுபடும், எனவே நேரம் சரியல்ல என்று நாம்—கம்யூனிஸ்டுகள்—எச்சரித்தோம். ஆனால் அதையெல்லாம் காங்கிரசின் பெரும் தலைவர்கள் காதிலே போட்டுக்கொள்ளத் தயாராக இல்லை. அவர்களது கண்களுக்கு இந்த பிரிட்டிஷ் சனியன் ஒன்றுதான்பட்டது. அந்த பிரிட்டிஷ் சனியன் இன்று வசமாக சிக்கியுள்ளது. இச்சமயத்தில் ஒரு தட்டு தட்டினால் ''தொப்'' பென்று சுதந்திரம் நமது மடியிலே வந்துவிழும் என்று கணக்குப்போட்டார்கள்.

1942 ஆகஸ்டு 7, 8 தேதிகளில் பம்பாயில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூடியது. ''வெள்ளையனே வெளியேறு'' என்ற பிரசித்தி பெற்ற தீர்மானத்தை நிறைவேற்றினார்கள். அந்தத் தீர்மானத்தின் அடிப்படையில் வெகுஜனப் போராட்டத்தைத் துவக்க மகாத்மா காந்திக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. அவரே தளபதி என்றும் முடிவு செய்யப்பட்டது.

அந்தப் பிரசித்திப் பெற்ற ''குவிட்-இந்தியா'' (இந்தியாவை விட்டு வெளியேறு) என்ற தீர்மானம் பற்றி எதற்கு இங்கு இவ்வளவு

என்கிறீர்களா? அந்தத் தீர்மானத்திலும் மாநில சுயாட்சி என்பது வற்புறுத்தப்பட்டிருக்கிறது என்பதற்காகத்தான்! (இதெல்லாம், பாவம், தஞ்சை ராமமூர்த்திகளுக்கும் இன்னபிற இளவட்டங்களுக்கும் தெரிந்திருக்க நியாயமில்லை!).

அந்தத் தீர்மானத்தின் 4-வது பாராவில் வெள்ளையன் வெளியேறியதும் ஒரு தற்காலிக சர்க்கார் அமையும் என்று கூறுகிறது. அந்த தற்காலிக அரசு என்ன செய்யுமாம்? அந்தத் தீர்மானத்தின் வாசகத்தை இங்கு அப்படியே தருகிறோம்:

"The provisional Government will evolve a scheme for a constituent assembly which prepare a Constitution for the Government of India acceptable to all sections of the people. This Constitution according to the Congress view should be a federal one with the LARGEST MEASURES OF AUTONOMY for the federating Units and with the residuary powers vesting in these Units."

— "தற்காலிக அரசு, மக்களின் எல்லாப் பகுதியினரும் ஒப்புக்கொள்ளக் கூடிய இந்திய அரசுக்கான ஒரு அரசியல் சாசனத்தைத் தயாரிக்க, ஓர் அரசியல் சட்டமன்றத்துக்கான திட்டத்தை உருவாக்கும். காங்கிரசின் கண்ணோட்டத்தில் அந்த அரசியல் சாசனம், சமஷ்டியில் இணையும் அங்கங்களுக்கு (மாநிலங்களுக்கு) மிக மிக அதிகபட்ச அளவு சுயாட்சி தரும் சமஷ்டி அமைப்பாக இருக்க வேண்டும் மிச்சமுள்ள அதிகாரங்கள் அங்கங்களுக்கே (மாநிலங்களுக்கே) இருக்க வேண்டும்"

தெளிவாக இருக்கிறதல்லவா? இந்திரா காங்கிரஸ் அன்பர்களும், இந்திரா—கம்யூனிஸ்ட் அன்பர்களும் ஒரு தடவைக்கு இரண்டு தடவை, மேலே உள்ளதைப் படித்துப் பார்க்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம். வெள்ளையனை வெளியேற்றிய சுதந்திர இந்தியா எப்படி இருக்கவேண்டும் என்று காங்கிரசின் அகில இந்திய அமைப்பு மிகத்தெளிவாக எடுத்துச் சொல்லி இருந்தது. இன்று காங்கிரசின் தலைவர்கள் தலைகீழாக மாறிப் பேசுகின்றனர். அது வேறு விஷயம்.

நாட்டுக்கும், மக்களுக்கும் தந்த எந்த வாக்குறுதியை காங்கிரஸ் நிறைவேற்றியது? தந்த வாக்குறுதிகள் அனைத்தையும் ஒழித்தெறிந்தனர். ஒழித்து எறியப்பட்டு காற்றோடு காற்றாக கலந்து போன வாக்குறுதியில் இதுவும் ஒன்று! அன்று அவர்கள் "மாநில சுயாட்சி" என்று முழக்கமிட்ட பொழுது இந்திய மக்கள் அனைவரையும் ஒன்றிணைத்து, வெள்ளையனை எதிர்த்த புனிதப் போரில் ஐக்கியப்படுத்திய "தேச பக்த" கோஷம் அது. மக்களுக்கு அளித்த வாக்குறுதியை மறவாமல் இன்னும் அந்த கோஷத்தை

உயர்த்திப்பிடித்து, இந்திய மக்களது ஒருமைப்பாட்டை பேணிப் பாதுகாக்க, இதன் அவசியத்தை மார்க்சிஸ்டுகளாகிய நாம் வற்புறுத்தினால், அது தேசத்துரோகம்! தி மு க. வினர் முழங்கினால் தேசத்துரோகம், தேசத்தைத் துண்டாடச் சதி! காங்கிரஸ் தலைவர்களது—அவர்களது ஏஜண்டுகளான இந்திரா கம்யூனிஸ்டு தலைவர்களது நயவஞ்சகப் பேச்சுகளுக்கும், பேத்துமாத்துக்களுக்கும் ஏதாவது எல்லை உண்டா?

# மாநில சுயாட்சியே இந்திய ஒற்றுமை காக்கும் வழி

ஒருவேளை, ''பிரிவினைச் சதி'' என்றும் ''இந்தியாவைத் துண்டாடும் சூழ்ச்சி'' என்று கூப்பாடு போட்டு மிரட்டிக் கொண்டே இருந்தால், தி.மு.க. தலைவர்கள் மிரண்டு விடுவார்கள் என்று எதிர்பார்க்கிறார்களா? பாவம், தங்களது ''முற்போக்குக் கூட்டணியில்'' முக்கியஸ்தராக இருந்த சலைஞர், ஆயிரம் கோவில்களில் போய் சத்தியம் செய்தாலும் நம்பமாட்டார்கள் போல் இருக்கிறது! ''நான் இனி என்றென்றும் பிரிவினை கேட்கமாட்டேன். தப்பித் தவறி பிரிவினைக் கிளர்ச்சி ஏதாவது எழுந்தால், அதை அடக்க என்னால்தான் முடியும். நாங்கள் திராவிட நாடு என்பதை விட்டது விட்டதுதான்'' என்று கருணாநிதியும் அவரது சகாக்களும் திரும்பத் திரும்பச் சொல்லிப் பார்க்கிறார்கள். இருந்தாலும், இண்டிகேடர்களும், அவர்களது ஏஜண்டுகளும் விடமாட்டேன் என்கிறார்கள். ''மாநில சுயாட்சியும் அங்குதான் — பிரிவினைக்குத்தான்—கொண்டு விடும். எனவே பேசாதே, மூச்சு காட்டாதே'' என்று மிரட்டுகின்றனர். இப்படியே மிரட்டினால் தி.மு க. வினர் மிரண்டு, இதையும் — திராவிட நாட்டைக் கைவிட்ட மாதிரி — விட்டுவிடுவார்கள் என்று எதிர்பார்க்கிறார்களோ என்னமோ!

அது எப்படிப் போனாலும் நம்மைப் பொறுத்த மட்டில் நாம் இதைக் கைவிட மாட்டோம். இது நமது கட்சியின் திட்டத்தின் அடிப்படை கோஷங்களில் ஒன்றாகும். மக்கள் ஜனநாயக இந்தியாவில் விரிவான மாநில சுயாட்சி நிலவும் என்று நமது திட்டம் தெளிவாகக் கூறுகிறது. கட்சியின் திட்டம் என்பது நமது மூலாதாரமான தஸ்தவேசு. இந்திய ஒற்றுமையை — இன்று ஆளும் வர்க்கங்களால் சிதறடிக்கப்பட்டு வரும் இந்திய ஒற்றுமையை கட்டிக் காக்கவே, மாநில சுயாட்சி என்பது மிக மிக அவசியம் என்பதால்தான் அந்த மூலாதாரமான தஸ்தவேசில் இது குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆரம்பத்திலேயே நாம் எடுத்துக் காட்டியிருப்பதைப் போல், இந்திய கம்யூனிஸ்டு இயக்கம் ஆதிமுதலாகவே இதனை வற்புறுத்தி வந்துள்ளது. இது ஏதோ, நேற்றுப் பிறந்த ''திடீர்'' ஞானோத

யம் அல்ல. இதை, எவர் தயவை எதிர்பார்த்தோ, உருட்டல் மிரட்டல்களுக்கு பயந்தோ நாம் கைவிட மாட்டோம்.

**இந்தியா ஒரு தேசமல்ல.** இப்படி நாம் சொன்ன உடனேயே நம்மை எல்லோரும் முறைத்துப் பார்ப்பார்கள். காங்கிரஸ் தலைவர்களுக்கும் ஜனசங்கத்தார்களுக்கும் கண்கள் எல்லாம் சிவந்து விடும். ''ஆய் ஊய்'' என்று கத்துவார்கள். கத்தட்டும்! கதறட்டும்! தொண்டைகளைக் கிழித்துக்கொள்ளட்டும்! இந்தியா ஒரு தேசமல்ல; பல தேசங்களைக் கொண்ட ஒரு கூட்டமைப்பு.

ஒரு மொழி, ஒரு தேசம், ஒரு அரசு என்ற வகையில் பிரிட்டன் மாதிரியல்ல இந்தியா; பிரான்ஸ் மாதிரியல்ல இந்தியா; இத்தாலி மாதிரியல்ல இந்தியா; ஜெர்மனி மாதிரியல்ல இந்தியா; ஸ்பெயின் மாதிரியல்ல இந்தியா; பல மொழிகள்—முதிர்ச்சியடைந்த செம்மையாக வளர்ந்துள்ள பல மொழிகள்—நீண்ட வரலாற்றுச் சிறப்புக்கொண்ட—தனித்தனி பண்பாட்டு இயல்புகளுடன் கூடிய பல தேசங்கள், வரலாற்றுப் போக்கில் இவை அனைத்தும் நல்ல உறவுகளுடன் இணைந்து வாழும் ஒரு கூட்டமைப்பாக ஒரு மத்திய அரசுடன் விளங்கும் நிலை—இது இந்தியா. இந்தியாவின் அரசியல் நிர்வாக ஒற்றுமை என்பதே பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பின்னர் தோன்றியதே. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்த போராட்டத்தில் இந்த ஒற்றுமை—மக்கள் மத்தியில்—மேலும் வலுப்பட்டது. இதனை மேலும் உருவாக்க வேண்டும் என்பதே நமது அவா.

பாகிஸ்தான் ஒரு தேசமல்ல! ''இந்தியா ஒரு தேசமல்ல'' என்பதை ஏற்க மறுப்பவர்கள், இதை ஏற்கிறார்கள்! ஏனெனில் அது '' எதிரி'' நாடு. பங்களா தேஷ் விடுதலையான பின்னரும் இன்றுள்ள பாகிஸ்தானும் ஒரு தேசமல்ல. பஞ்சாபியர்கள், பக்தூனியர்கள், பலூச்சிகள், சிந்தியர்கள் என்ற தேசிய இனங்களை கொண்ட ஒரு கூட்டமைப்பே பாகிஸ்தான். அங்கு மீண்டும் மாநில சுயாட்சிக் கோரிக்கை எழுந்துள்ளது. நமது நாட்டு ஏடுகள் மகிழ்ச்சி பொங்க, ''பாகிஸ்தானில் மீண்டும் மாநில சுயாட்சி கோரிக்கை'' என்று கொட்டை எழுத்துகளில் போடுகின்றன! இங்கு மாநில சுயாட்சி என்று பேசவே கூடாது என்பவர்கள் அங்கு அந்த கிளர்ச்சிக்கு ஆதரவு காட்டுகிறார்கள். அரசியல் அயோக்கியர்கள்!

இந்தியாவும் பாகிஸ்தானைப் போலவே பல தேசங்களைக் கொண்ட ஒரு நாடு. இது விஞ்ஞான உண்மை. இதை யாரும் மறைக்க இயலாது. இப்படிப்பட்ட அமைப்பில் மாநிலங்களாக அமைந்துள்ள இந்த தேசங்களுக்கு விரிவான சுயாட்சி வழங்கப்படுவது என்பது மிக மிக அவசியம்—இந்தப் பல்வேறு தேச மக்களது ஒற்றுமையைக் காக்கவே—இது அவசியம்.

# ஒற்றுமைக்கு ஊறு விளைவிப்பவர்கள் யார்?

இந்த இந்திய ஒற்றுமைக்கு இன்று ஊறு விளைவிப்பவர்கள் யார்? எதனால் 1947-க்குப் பின்னர் இந்த ஒற்றுமை உணர்வு குன்றி வருகிறது? இந்த விரும்பத்தகாத போக்குக்கான அடிப்படைக் காரணங்கள் எவை? இக்கேள்விகளுக்கு அறிந்து நாம் விடை காண வேண்டும்.

முதலில், பிரதானமாக இந்திய ஒற்றுமைக்கு ஊறுவிளைப்பது காங்கிரசின் மத்திய அரசே. முதலாளி வர்க்கத்துக்கும் நிலச்சுவான் வர்க்கத்துக்கும் பிரதிநிதியாக நின்று செயல்படும் அதன் 25 வருட கொள்கை என்ன? முயற்சி என்ன? அந்நிய நாட்டு முதலாளிகளின் துணைகொண்டு இந்தியாவில் முதலாளித்துவ ரீதியான தொழில் வளர்ச்சிகாண வேண்டும் என்பதே! கலப்படப் பொருளாதாரம் ('கொஞ்சம் பொதுத்துறை—கொஞ்சம் தனியார் துறை"—ஆக இரண்டும் கொண்ட கலப்படம்) என்ற மோசடிக்குப்பின் முதலாளித் துவத்தைத்தான் வளர்த்து வருகிறார்கள் என்பதை, இன்று காங்கிர சின் மேல் மட்டத் தலைவர்களில் சிலரே, பகிரங்கமாகக் கூறிவரு கின்றனர். தற்சமயம் "கூட்டுத்துறை" என்று ஒரு புதிய சொல் அதிகமாகப் பயன்படுத்தப்படுகிறது இந்தச் சொல்லை விளம்பரப் படுத்தியதற்கான புகழை திரு மாதவனுக்குத் தருவதா அல்லது திரு சவானுக்குத் தருவதா என்பது தெளிவாக இல்லை! ஒருவேளை திரு. மாதவனுக்குத்தான் இதில் முதல்பரிசு உரியதாக இருக்கலாம்! இதன் பொருள் என்ன? ஒரே ஆலையில் அரசு மூலதனம் ஒரு பகுதி (பெரும் பகுதி) தனிப்பட்ட முதலாளிகளது மூலதனம் ஒரு பகுதி (மிகமிக சிறு பகுதி) இவ்வாறு முதலாளிகளும், அவர்களது அரசும் "கூட்டாக" முதலீடு செய்து தொழில் நடத்துவது—இதைத்தான் கூட்டுத்துறை என்கின்றனர்.

இந்தக் கூட்டுத்துறைத் தொழிலின் நிர்வாகம், தொழில் நிர் வாகத்தில் அனுபவசாலிகளான பெரு முதலாளிகளிடம் இருக்கும், அதன் ஆதாயமும் அவர்களுக்கே கிடைக்கும்!

'கலப்படப் பொருளாதாரம்' ஆனாலும், "கூட்டுத்துறை" ஏற் பாடு ஆனாலும், இவை முதலாளித்துவத்தை கட்டி வளர்க்கத்தான் என்பதில் இந்நாட்டில் அரசியல் தெரிந்த எவருக்கும் சந்தேகம் இருக்க முடியாது கடந்த 25 ஆண்டுகளாக நாடு இவ்வழிகளிலே சென்று என்ன விளைவுகளைக் கண்டது!

1. ஏகபோக முதலாளிகள், பெரு முதலாளிகள், கொழுத் தனர் இந்த உண்மையை ஆளும் கட்சியே இன்று மறுக்கமுடிய வில்லை.

2. பிரதேச ஏற்றத்தாழ்வு அதிகரித்துள்ளது. அதாவது இந்தியாவில் ஒரு சில இடங்களில் தொழில்கள் குவிந்து வளர்கின்றன. பெரும்பாலான வளர்ச்சியற்ற இடங்களுக்கும் இந்தச் சில இடங்களுக்கும் இடையே இடைவெளி அதிகரித்துக்கொண்டே இருக்கிறது.

இந்த இரண்டு விளைவுகளும் தவிர்க்க முடியாதவை. இவை முதலாளித்துவ வளர்ச்சியின் இயல்பு; முதலாளித்துவ வளர்ச்சியின் விதிகள். முதலாளித்துவ வளர்ச்சிப் போக்கில் மூலதனம் மேலும் மேலும் ஒரு சிலர் கைகளிலே குவியும். சிறிய மீன்களைப் பெரிய மீன்கள் விழுங்கிக் கொழுக்கும்—இது ஒரு விதி. அதே மாதிரி முதலாளித்துவ வளர்ச்சியில், ஏற்றத் தாழ்வான வளர்ச்சி என்பது இன்னும் ஒரு விதி. ஒரு சில தேசங்கள் அல்லது தேசத்தின் பகுதிகள் மட்டும் குவியலான வளர்ச்சி காண்பதும், மற்ற பல தேசங்கள் அல்லது தேசத்தின் பகுதிகள் வளர்ச்சி குன்றி நிற்பதும் விதி வழிப்பட்டது. இல்லாத கடவுள் உண்டாக்கிய விதியல்ல; இயல்பான விஞ்ஞான விதி.

முந்திய விதியின் செயல்பாடு குறித்து விளக்கம் ஒன்றும் தேவையில்லை. சென்ற 25 ஆண்டுகளில் இந்தியா கண்ட ''வளர்ச்சி'', பிரதானமாக 75 ஏகபோக முதலாளித்துவக் குடும்பங்களின் வளர்ச்சியே என்ற உண்மை இந்த விதியை நிரூபிக்கும் மலை போன்ற சான்று.

பிந்திய விதியை மிகச் சுலபமாக விளக்கலாம். கோவை நகரிலும் அதைச் சுற்றிலும் தொழில்கள் வளர்ந்து வருகின்றன. நூற்பு, நெசவு ஆலைகள் முதலில் வளர்ந்தன. பின்னர் அதை ஒட்டியே அந்த ஆலைகளுக்குத் தேவையான இயந்திரங்கள் அல்லது அவற்றின் பாகங்களைச் செய்துகொடுக்கும் இஞ்சினியரிங் தொழில்கள் வளர்ந்தன. இப்பொழுது, தமிழ்நாட்டு முதலாளிகளை தர்மபுரிக்குப்போய் மூலதனம் போட்டு தொழில்களை ஆரம்பியுங்கள் என்று சொன்னால் போவார்களா? அல்லது கிழக்கு ராமநாதபுரத்துக்குப் போங்கள் என்றால் போவார்களா? அவையும் நமது தாய்த் தமிழ்நாட்டின் பகுதிகள் தானே? மூலதனம் அந்த இடங்களுக்குப் போகாது! ஏற்கனவே தொழில் வளர்ச்சி ஏற்பட்டு, ரயில் போக்குவரத்தும், ரஸ்தாப் போக்குவரத்தும் நன்கு அமையப்பெற்று, பயிற்சி பெற்றுவரும் தொழிலாளி மக்களும் உள்ள இடங்களுக்குத் தான் மூலதனம் பாயும். உற்பத்தியான சரக்குகளை உடனடியாக விற்பதற்கான வாய்ப்பும் ஏற்பாடுகளும் ஏற்கனவே அமையப்பெற்ற இடத்துக்கே மூலதனம் ஓடும். ரயில், ரோடு வசதிகள் அதிகம் இல்லாத சரக்குகளை சட்டென்று சந்தையிலே தள்ளிவிடும் வர்த்தக ஏற்பாடு (ஆலைகளின் ஏஜண்டுகள், அவர்கள் கீழ் உள்ள மொத்த

வியாபாரிகள் அவர்களின் கீழ் உள்ள ஏராளமான சில்லரை வியாபாரிகள் என்ற ஏற்பாடு) இல்லாத - பயிற்சிபெற்ற தொழிலாளர்கள் இல்லாத - தர்மபுரிக்கும், கிழக்கு ராமநாதபுரத்துக்கும் மூலதனம் போகாது.

இதன் விளைவு என்ன ஆகும்? வளர்ச்சி பெற்றுவரும் கோவைக்கும், வளர்ச்சிபெறாத தர்மபுரிக்கும் இடையில் அகழி மேலும் ஆழமாகும். இந்த ஏற்றத் தாழ்வான வளர்ச்சி என்பது முதலாளித்துவத்தின் உடன்பிறப்பு, விதி. முதலாளி வர்க்கத்தின் கைகளில் புரளும் மூலதனம் "ஐயோ பாவம்! தர்மபுரி பின்தங்கியிருக்கிறது; அதை முன்னேற்றுவோம்" என்று அனுதாபப்பட்டு செயல்படாது—எங்குபோனால் சட்டென்று அதிகலாபம் சம்பாதிக்க முடியும் என்ற ஆசையினால் மட்டும் உந்தப்பட்டு செயல்படும். அதன் விளைவாக பிரதேச ஏற்றத் தாழ்வுகள் அதிகரிக்கும்.

மூலதனத்துக்கு "நாட்டுப் பற்றோ", "பிரதேசப் பற்றோ" கிடையாது. லாபப் பற்று ஒன்றுதான் உண்டு. பிர்லா என்பவர் இந்தியாவின் முதல் கோடீஸ்வரர். அவர் ராஜஸ்தான் மாநிலத்தில் மார்வார் என்ற பிரதேசத்தைச் சேர்ந்த மார்வாரி. "என்னுடைய மாநிலமான ராஜஸ்தானம் தொழில் வளம் பெறவேண்டும்" என்று பாலைவனம் நிறைந்த ராஜஸ்தானிலா முதலீடு செய்கிறார்? இல்லையே? முதலீடு செய்ய கல்கத்தாவுக்கும், பம்பாய்க்கும் தானே போகிறார்? எங்கு போனால் விரைவில் அதிக லாபம் கிடைக்குமோ அங்குதான் போகிறார்.

எனவே, இந்த ஏற்றத்தாழ்வான வளர்ச்சி என்பது, முதலாளித்துவ வளர்ச்சிப் பாதையின் இயல்பான விளைவு. ஏற்றத் தாழ்வுகள் குறைவதற்குப் பதிலாக அதிகரித்துவருகின்றன. இதனால் மத்திய அரசுக்கும் மாநில அரசுக்கும் பிணக்குகள் அதிகரிக்கின்றன. மாநிலத்துக்கு மாநிலம் பொறாமையும் ஆரோக்கியமற்ற போட்டிகளும் வளர்கின்றன. மொத்தத்தில் இந்திய ஒற்றுமை உணர்வு பலவீனமடைந்து நைந்துவருகிறது. ஒரு மாநிலத்துக்குள்ளே கூட பிரதேசத்துக்குப் பிரதேசம் பிணக்குகள் தோன்றுகின்றன; ஒரே மொழி பேசும் தெலுங்கு மக்களுக்குள் தெலிங்கானா பகுதிக்கும் மற்ற பகுதிக்கும் இடையில் எவ்வளவு கடுமையான நிலை தோன்றியது என்பதை நாம் மறந்திருக்க முடியாது.

## இந்திய ஒற்றுமை மங்குகிறது

மூலதனமும் வசதிகளும் வாய்ப்புக்களும் ஒரு சிலர் கைகளிலே குவியக் குவிய, அதை ஒட்டியே, மத்தியிலே அதிகாரங்களும் குவிக்கப்படுகின்றன. இவ்வாறு அதிகாரங்கள் ஒரு மையத்தில் குவிவது, மூலதனம் ஏகபோக முதலாளிகளிடம் குவிவதின் விளைவே. அதிகாரங்களை மத்தியிலே குவித்து வைத்துக்கொண்டு, "இந்திய ஒற்றுமை" என்ற மந்திரத்தை ஜபித்துக்கொண்டு, இந்தியாவின் சகல பகுதிகளிலும் உள்ள செல்வங்களையும் உழைப்பாளிகளையும் தாங்களே மேலும்

சுரண்டிக் கொழுக்கவேண்டும் என்று ஏகபோக முதலாளிகள் முனைகின்றனர்; தீவிரமாகச் செயல்படுகின்றனர். மாநிலங்களில் உள்ள சாதாரண முதலாளிகளுக்கு இடம் கொடுக்காமல் அவ்வளவையும் வாரி தங்கள் வாயிலே போட்டுக் கொள்கிறார்கள் இந்த ஏகபோக முதலாளிகள். இதனால் நேரடியாக பாதிக்கப்படும் மாநில முதலாளிகள் கூப்பாடு போடுகின்றனர். "எங்கள் மாநிலத்தில் எங்களுக்கு இடமில்லையா! எங்கள் மாநில வசதிகளைப் 'பிறர்' பயன்படுத்திக்கொண்டு எங்களுக்கு இல்லாமல் செய்வதா? எங்கள் மாநிலச் சந்தை எங்களுக்கு இல்லையா?" என்று கூப்பாடு போடுகின்றனர். அத்துடன் சேர்த்து. 'எங்கள் பண்பாடு, எங்கள் மொழி' என்ற கோஷங்களையும் சேர்த்துக் கொள்கிறார்கள். "முதலாளி வர்க்கம் சந்தையில்தான் தேசியத்தைக் கற்றுக்கொள்கிறது" என்று தோழர் ஸ்டாலின் கூறியது எவ்வளவு பொருத்தமானது என்பதை நாம் எளிதாகப் புரிந்துகொள்ளலாம். வளர்ச்சி காண முனையும் மாநில முதலாளிகள் "எங்கள் தேசம், எங்கள் பண்பாடு எங்கள் மொழி எங்கள் சந்தை என்று 'தேசியம்' பேசுகின்றனர்.

இந்தியா முழுவதையும் தங்களது சுரண்டல் வேட்டைக் காடாக வைத்துக்கொள்ள முயற்சி செய்யும் பெரிய முதலாளிகள்— ஏகபோக முதலாளிகள் "அகில இந்திய தேசியம்" பேசுகின்றனர். இதை எதிர்த்து தங்கள் பகுதியின் வாய்ப்புகளும் வசதிகளும் தங்களுக்கு மட்டுமே பயன்படவேண்டும் என்று விரும்பும் மாநில முதலாளிகள் 'மாநில தேசியம்" பேசுகின்றனர்! இன்று இந்தியாவின் அனைத்து மாநிலங்களிலும் இப்படிப்பட்ட தேசிய உணர்வு மேலோங்கி நிற்பது கண்கூடு.

இந்தியன் என்ற உணர்வு மங்கி, தமிழன், மலையாளி, ஆந்திரன் வங்காளி, குஜராத்தி, மராத்தி, பஞ்சாபி, இந்துஸ்தானி, ராஜஸ்தானி, கன்னடத்தான் என்ற உணர்வுகள் மேலோங்கி வருகின்றன.

இதுதான், மத்திய சர்க்காருக்கும் மாநில சர்க்கார்களுக்கும் இடையில் ஏற்படும் பிணக்குகளுக்கு அடிஆழத்தில் உள்ள அடிப்படையான காரணமாகும். இன்று, ஏதாவது ஒரு வகையில் மத்திய சர்க்கார் மீது அதிருப்தி காட்டாத, ஒரு மாநில சர்க்காரையும் பார்க்க முடியாது. புறக்கணிக்கப்படுவதாக, அல்லது போதுமான நிதி வசதி தரவில்லை என்று, அல்லது உரிய நியாயம் வழங்கப்படவில்லை என்று, அல்லது குறிப்பிட்ட பொதுத்துறை தொழிலை தனது மாநிலத்தில் வைக்கவில்லையென்று, அல்லது தனது மாநிலம் ஈட்டித் தரும் அந்நியச் செலாவணி அளவுக்கு ஈடான பிரதிபிரயோசனம் கிடைக்கவில்லையென்று, அல்லது தனது மாநிலத்துக்குப் போதுமான லைசென்சுகள் — தொழில்களுக்கான — தரப்படவில்லை என்று... இப்படி ஒருவகையில், அல்லது பலவகைகளில், மத்திய சர்க்காரிடம் வருத்தம் பாராட்டாத மாநிலமே கிடையாது. மாநிலத்தில் ஆளும் கட்சி எந்தக் கட்சியாக இருந்தாலும் — மத்தியிலே ஆளக்கூடிய

காங்கிரஸ் கட்சியே பெரும்பாலான மாநிலங்களில் ஆட்சிசெய்தா லும் — இதுதான் நிலைமை.

இவ்வாறு மத்திய அரசில் பேராதிக்கம் வகித்துக் கொண்டு அதன் மூலம் தங்களது சுரண்டலைத் தீவிரப்படுத்திக் கொண்டு மாநில அல்லது பிரதேச ஏற்றத் தாழ்வுகளை வளர்த்துக் கொண்டிருக்கும் பெரு முதலாளிகளின் வேலையே — அவர்களது ஏஜண்டாகச் செயல் படும் மத்திய காங்கிரஸ் அரசின் கொள்கைகளே, இந்திய ஒற்றுமை யைச் சீர்குலைத்துக் கொண்டிருக்கின்றன. அவர்களும் அவர்களது அரசியல் ஏஜண்டுகளும் ''இந்திய ஒற்றுமை'' என்று பேசுவது எல்லாம், இந்தியா என்ற 55 கோடி மக்களைக் கொண்ட சந்தை தங்களுக்கு ஏகபோகமாக இருக்க வேண்டும் என்பதற்கே. அவர் களுக்கு இந்தியாவில் உள்ள பல்வேறு மக்கள் மத்தியில் ஒற்றுமை உணர்வு வளர வேண்டும் என்பதில் அக்கறை இல்லை.

இவர்களுக்கு எதிராக, தங்களுக்கு வாய்ப்புக்களும் வசதிகளும் வேண்டும் என்று கேட்கும் மாநில முதலாளிகளது கூப்பாட்டில் நியாயம் இருந்த போதிலும், அந்தந்த மாநில முதலாளிகள், தங்க ளுக்குப் பின் மக்களைத் திரட்டிக் கொள்ள மாநில வெறியைத் தூண்டி விடுகின்றனர். அண்டை மாநில மக்களுக்கு, அல்லது மாநிலங்களின் மக்களுக்கு எதிராக வெறியைத் தூண்டி விடுகின் றனர்,

இவர்கள் மூலையிலிருந்து, இவர்களும் இந்திய ஒற்றுமையின் சீர்குலைவுக்குப் பங்காற்றுகின்றனர். தங்களது குறுகிய வர்க்க நலன் கள்—சுரண்டல் நலன்கள்தான் இவர்களது நோக்கம். அதற்காக பிற மாநிலமக்கள்மீது துவேஷத்தை வளர்க்க இவர்கள் தயங்குவதில்லை இந்த ''வெறிகளும் துவேஷங்களும்'' எந்த அளவு செல்கின்றன என்பதற்கு மராட்டிய மாநிலத்தில் சிவசேனையின் திருக்கூத்து ஓர் எடுத்துக்காட்டு. அசாமில் லட்சித் சேனை இதர மாநிலங்களு கு எதிராக நடத்திய வெறியாட்டம் இன்னொரு எடுத்துக்காட்டு

தனித் திராவிடநாடு என்ற கோஷத்தைக் கைவிடும் வரை தமிழ் நாட்டில், தி.மு.க. — வட இந்தியாவில் வாழும் மக்களுக்கும் அவர்களது பழக்க வழக்கங்களுக்கும், பண்பாடுகளுக்கும் எதிராக வளர்த்த வெறுப்பு இயக்கம் — தமிழ் நாட்டு முதலாளித்துவ தேசியத்தின் ஒரு வக்கிர பிரதிபலிப்பே.

இந்தியத் தொழிலாளி வர்க்கத்தில்—மொழி, இனம் என்பன வற்றைக் கடந்து — வளர்ந்து வரும் வர்க்க ஒற்றுமையை உடைக்க வும், தங்களது சுரண்டலுக்கு வலுவான எதிர்ப்பு இல்லாமற் செய்ய வும் இந்த வெறித்தனங்கள் பயன்படுத்தப்படுகின்றன.

இவ்வாறாக, கடந்த 25 ஆண்டுகளில் மேலே சொல்லியுள்ள அடிப்படைக்கோளாறான முதலாளித்துவ வளர்ச்சிப் பாதை என்பது, இந்திய மக்கள் மத்தியில், ஏற்கனவே ஓரளவு வளர்ந்திருந்த ஒற்றுமை உணர்வை சிதைத்து வருகிறது.

# மொழிவழி மாநிலப் போராட்டம்

அடுத்து, பெருமுதலாளிகளின் ஆதிக்கம் உயர உயர, அவர்களது பிரதானமான அரசியல் கட்சியான காங்கிரசின் கொள்கைகள் எப்படி மாறின என்பதைப் பார்ப்போம்.

பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படுத்தியிருந்த நிர்வாகம், ஒரே மொழி பேசும் மக்களைப் பல கூறுகளாகப் பிரித்து வைத்திருந்தது. உதாரணமாக, ஆந்திர மக்களின் ஒரு பகுதியினர் தமிழ் மக்களுடன் இணைக்கப்பட்டு சென்னை ராஜ்யத்தில் இருந்தனர். இன்னொரு பகுதி மக்கள், நைஜாமின் ஐதராபாத் சமஸ்தானத்தில் இருந்தனர். மலையாளிகளில் ஒருபகுதியினர் சென்னை ராஜ்யத்தில் இணைக்கப்பட்டிருந்தனர். தமிழகத்தின் ஒரு பகுதி, திருவாங்கூர் சமஸ்தானத்திலே இணைந்து கிடந்தது. இப்படி பல உதாரணங்களை அடுக்க முடியும். இந்தியாவின் விடுதலைக்கான போராட்டத்தை தலைமைதாங்கி நடத்திக்கொண்டிருந்தபொழுது, காங்கிரஸ் கட்சி என்ன கூறியது? சுதந்திர இந்தியாவில் இதையெல்லாம் மாற்றி மொழிவழி மாநிலங்களாக அமைப்போம் என்றனர். இந்தியா, அரசியல் சுதந்திரத்தை அடைந்து காங்கிரஸ் தலைவர்கள் கையிலே அதிகாரம் கிடைத்ததும் இவ்வாறு செய்தார்களா? செய்யவில்லை என்பது மட்டுமல்ல, செய்யக்கூடாது என்றனர். அவ்வாறு செய்யவேண்டும் என்ற கருத்தே தவறு என்றனர்! ''இந்திய ஒற்றுமைக்கு ஆபத்து'' என்றனர்.

கம்யூனிஸ்டுகள் இந்தத் துரோகத்தை ஏற்கவில்லை. ஐக்கிய கேரளத்திற்காக, புதிய தமிழகத்துக்காக (திருவாங்கூர் சமஸ்தானத்தில் பிணைக்கப்பட்டிருந்த நாஞ்சில் நாடு என்ற குமரி மாவட்டமும் சேர்ந்த தமிழகத்துக்காக) விசால ஆந்திரத்துக்காக, சம்யுக்த மகாராஷ்டிரத்துக்காக, மகா குஜராத்துக்காக—இவை போலவே இந்தியா முழுவதும் மொழிவழி மாநிலங்களாக அமைக்கப்படுவதற்காக—தொடர்ந்து கிளர்ச்சி செய்துவந்தோம். போகப்போக மற்ற கட்சிகளுக்குள் இந்தக் கொள்கையில் உறுதியாக இருந்தவர்களும் கிளர்ச்சி செய்தனர். ஆந்திரத்தைச் சேர்ந்த சர்வோதய தலைவர் தியாகி பொட்டி ஸ்ரீராமுலு சாகும்வரை உண்ணாவிரதம் இருந்தார்—தமிழ் நாட்டிலிருந்து பிரிந்து தனி ஆந்திரம் அமைய வேண்டும் என்பதற்காக கட்சி எல்லைகளை மறந்து ஆந்திர மக்கள் ஒன்றுபட்டு, அக்கோரிக்கைக்கு ஆதரவாகத் திரண்டனர். தியாகி ஸ்ரீராமுலு காங்கிரஸ் அரசின் பிடிவாதத்தால் உயிர் நீத்தார். ஆந்திர மக்கள்

கோபாவேசமாக வெகுண்டு எழுந்தனர். ரயில் போக்குவரத்தை முழுமையாக ஸ்தம்பிக்கச் செய்தனர். அவர்களது எல்லையற்ற ஆவேசத்திற்கு முன், மத்திய அரசு பணிந்தது; ஆந்திர மாநிலம் பிறந்தது.

இதன் பின்னராவது காங்கிரஸ் தலைவர்கள் மொழிவழி மாநிலம் என்ற சரியான கொள்கைக்குத் திரும்பினரா! இல்லை. மகாராஷ்டிரமும் குஜராத்தும், பம்பாய் ராஜ்யம் என்று பிணைக்கப் பட்டிருந்தன.

மகாராஷ்டிரம் என்ற மொழிவழி மாநிலத்தை அமைத்துத்தர மறுத்த ஆட்சியாளர்களது கரங்களிலிருந்து—200க்கு மேற்பட்டவர்களை காங்கிரஸ்ஆட்சியின் துப்பாக்கி ரவைகளுக்கு பலி கொடுத்து, பிடுங்கிஎடுத்தனர் மராத்தி மக்கள். இந்தி பேசும் ஹரியானா பகுதியை ஒதுக்கி, சமீபத்தில்தான் பஞ்சாபி மக்கள் தங்களது மாநிலத்தைப் பெற்றனர் என்பதும் நினைவிருக்கும்.

# காங்கிரசின் மொழிக் கொள்கை

அடுத்து, மொழிகளைப் பற்றிய காங்கிரசின் கொள்கை எப்படி இருந்தது,எப்படி மாறியது என்பதைப் பார்ப்போம்.சுதந்திரப் போராட்ட காலத்திலேயே இந்தியை அகில இந்திய மொழியாக வளர்க்கவேண்டும் என்றுதான் சொல்லி வந்தார்கள். அதே சமயத்தில், அந்தந்த மாநிலத்தில் அந்தந்த மொழியே முழு உரிமை பெற வேண்டும் என்பதை மிகவும் வலியுறுத்தி வந்தனர். ஆனால், அதிகாரம் கிடைத்ததும் என்ன செய்தார்கள்? பிந்தியதை முழுமையாக மறந்தனர்—ஏன், நிராகரிக்கவும்செய்தனர். (தமிழ்நாட்டில் காங்கிரஸ்1967-ல் தோற்கடிக்கப்படும் வரை, தமிழ்நாட்டைத் தமிழ்நாடு என்று பெயரிடக்கூட முடியவில்லை; தமிழ்நாட்டு நிர்வாகத்தில் தமிழுக்குக் கொஞ்சம்கூட இடமும் தரப்படவில்லை என்பதை மனதில் இருத்திக் கொள்ளவேண்டும்.) முந்தியதை பிரதானப் படுத்தி இந்தியா முழுவதின் ஆட்சிமொழியாக, நிர்வாகமொழியாக, இந்தியை ஆக்க தலைகீழாக நின்றனர். இயல்பாகவே கடுமையான எதிர்ப்புக் கிளர்ச்சிகள் பல மாநிலங்களில் தோன்றின. இந்த இந்தித்திணிப்பு எதிர்ப்புக் கிளர்ச்சி தமிழ்நாட்டில் 1965 ஜனவரியில் உச்ச நிலையைஅடைந்தது. அதன் பின்னரே மத்திய அரசு சற்றுப்பின் வாங்கியது!இன்றும் தனது இந்தித்திணிப்பு நோக்கத்தை மத்தியஅரசு கைவிட்டு விட்டதாக எண்ண இடமில்லை. காலப்போக்கில், மெல்ல, மெல்லஇந்த நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ளலாம் என்றுதான் இருக்கின்றனர். பளிச்சென்று கண்ணுக்குத் தென்படாத, முயற்சிகள் நீடிக்கின்றன,

இவை நீடிக்க நீடிக்க, இந்திய ஒற்றுமை உணர்வு நலியும்;சகல மொழிகளின் சமத்துவத்தை ஏற்காத எந்தக் கொள்கையும் இந்திய

மக்களது ஒற்றுமையைப் பாதுகாக்கவோ, வளர்க்கவோ உதவாது. இவ்வாறு, ஒரு மொழியின் மேலாதிக்கத்தை ஏற்படுத்த காங்கிரசின் மத்திய அரசு செய்துவரும் முயற்சிகள், இந்திய ஒற்றுமை உணர்வு குன்றுவதற்கு ஒரு முக்கியமான காரணமாகும்; திராவிட இயக்கம் தமிழ் நாட்டில் பரந்து வளர்ந்ததற்கு இது ஒரு பிரதான காரணமாகும். பெரியார் ஈ. வெ. ரா. தேச விடுதலை இயக்கத்தை எதிர்த்து, நீதிக்கட்சியுடன் இணைந்து இருந்த காலத்தில், வெகுஜன ஆதரவை இழந்து நின்றார். பின்னர் 1938-ல் ராஜாஜி தலைமையில் சென்னையில் அமைந்த காங்கிரஸ் மந்திரி சபை, இந்தியை கட்டாய பாடமாக்கத் திட்டமிட்டது. இதை எதிர்த்து பெரியார் போராடத் தொடங்கினார். உடனே, அப்போராட்டத்தின் நியாயத்தினால் தமிழ் மக்களில் கணிசமான பகுதியினர் அவருக்குப்பின்னால் திரண்டனர் என்பது வரலாறு. அதே மாதிரி தி. மு க. விரிவாக வளர்ந்ததற்கு இந்தித் திணிப்பு பற்றி தமிழ் மக்கள் உண்மையில் கவலைப்பட்டதும் அதை எதிர்ப்பதில் தி. மு. க முன்னணியில் இருந்ததும் மிக முக்கியமான காரணமாகும்.

## கூட்டாட்சி தத்துவம் தகர்க்கப்பட்டது

மாநில சுயாட்சி என்ற கொள்கையையும் கைவிட்டது காங்கிரஸ். ஏற்கனவே, காங்கிரசின் கொள்கை, இவ்விஷயத்தில் என்னவாக இருந்தது என்பதை என்பதை விளக்கியுள்ளோம். 1937 லேயே மாநிலசுயாட்சிக்காக நின்றது காங்கிரஸ். பின்னர் 1942 ஆகஸ்டு தீர்மானத்தில் அவர்கள் அதை மீண்டும் வற்புறுத்தினதைப் பார்த்தோம்.

அது மட்டுமல்ல, 1946-ல் மத்திய சட்டமன்றத்துக்கும், (அன்று நாடாளுமன்றம் இருக்கவில்லை. அது சுதந்திரத்துக்குப் பின் குடியரசு என்று பிரகடனம் செய்யப்பட்ட 1950 ஜனவரி 26-ந்தேதிக்குப் பின் 1952-ல் வயது வந்த அனைவருக்கும் வாக்குரிமையளிக்கப்பட்டு, தேர்தல்கள் நடந்தபின் அமைந்தது) மாநில சட்டமன்றங்களுக்கும் தேர்தல்கள் நடக்க இருந்தன. அதுசமயம் மக்களைச் சந்தித்து மக்களின் ஆதரவைத் திரட்டிக்கொள்ள, காங்கிரஸ் கட்சி ஒரு தேர்தல் அறிக்கையை வெளியிட்டது. அந்தத் தேர்தல் அறிக்கையில் அவர்கள் என்ன சொன்னார்கள் என்பதைப் பாருங்கள்:

"The Constitution in its view, should be a federal one, with autonomy for its constituent units, and its legislative organs elected under universal adult franchise. The federation of India must be a willing union of its Various parts. In order to give the maximum of freedom to the constituting units, there may be a minimum list of common and essential

federal subjects, which will apply to all units, and a further optional list of common subjects, which may be accepted by such units as desire to do so ......"

அதாவது, காங்கிரசின் பார்வையில், அரசியல் சாசனம் என்பது, இணைந்துள்ள அங்கங்களுக்கு சுயாட்சியுடன் கூடிய சமஷ்டியாக இருக்கவேண்டும்; அதன் சட்ட மன்றங்கள் வயது வந்த அனைவரும் வாக்களித்து ஏற்படுத்தியவைகளாக இருக்கவேண்டும்; இந்திய சமஷ்டி அதன் பல்வேறு பகுதிகளின் இஷ்டபூர்வமான சேர்க்கையாக இருக்கவேண்டும். இணைந்துள்ள அங்கங்களுக்கு அதிகபட்ச சுதந்திரத்தை அளிக்கத்தக்க விதத்தில், எல்லா அங்கங்களுக்கும் பொருந்தக்கூடிய, பொதுவான அத்தியாவசியமான சமஷ்டிக்கான **குறைந்தபட்ச விஷயங்கள்** கொண்ட ஒரு பட்டியலும், (மத்திய சர்க்காருக்கு குறைந்தபட்ச அத்தியாவசியமான அதிகாரங்கள் மட்டும் என்று அர்த்தம். பாக்கி அதிகப்பட்ச அதிகாரங்கள் அங்கங்களுக்கே—அதாவது மாநிலங்களுக்கே என்றும் அர்த்தம்) விரும்பக்கூடிய மாநிலங்கள் ஏற்றுக்கொள்ளலாம் என்ற நிலையில் பொதுவான (மத்திய அரசுக்கும் மாநில அரசுக்கும்) விஷயங்களைக் கொண்ட இன்னொரு பட்டியலும் இருக்கலாம்!

அதாவது, அத்தியாவசியமான குறைந்தபட்ச அதிகாரங்கள், மத்திய சமஷ்டி அரசுக்கு; அதிகபட்ச அதிகாரங்கள் மாநில அரசுகளுக்கு. இரண்டுக்கும் பொதுவான சில அதிகாரங்களைக் கொண்ட 3-வது பட்டியல் ஒன்று வைத்துக் கொள்ளலாம். அந்த 3-வது பட்டியலை எந்த மாநிலங்கள் விரும்புகின்றனவோ அவை ஏற்கலாம்! விரும்பாத மாநிலங்கள் ஏற்கத் தேவையில்லை.

மேலே கொடுக்கப்பட்டுள்ள வாசகங்களின் பொருள் மிக மிகத் தெளிவாக உள்ளது. இஷ்டபூர்வமாக இணைந்துள்ள மாநிலங்களைக் கொண்டது இந்திய சமஷ்டி. சமஷ்டி அரசுக்கு (மத்திய அரசுக்கு) அத்தியாவசியமான குறைந்த அதிகாரங்களே இருக்கும்; இணைந்துள்ள மாநிலங்களுக்கே அதிக அதிகாரங்கள் இருக்கும்.

மத்திய அரசுக்கும் மாநில அரசுக்கும் பொதுவான கூட்டுப் பட்டியலை, மாநிலங்கள் ஏற்காமல் இருக்க உரிமையும் உண்டு.

இது மட்டுமல்ல! 1946-ல் பிரிட்டிஷ் சர்க்கார் அனுப்பிய தூதுகோஷ்டி ஒரு புறம்—காங்கிரஸ் தலைவர்கள் ஒரு புறம்—முஸ்லீம் ஒருபுறம் என்று முத்தரப்பாரும் பேச்சு வார்த்தைகள் நடத்திய சமயத்தில்—புதிய அரசியல் சாசனம் எப்படி இருக்க வேண்டும் என்பதைப் பற்றி, காங்கிரஸ் கட்சியின் சார்பாக முன் வைக்கப்பட்ட

ஆலோசனைகளில், அவர்கள் என்ன கூறினார்கள் என்பதை பாருங்கள்: அகில இந்திய சமஷ்டி அரசும், சட்ட மன்றமும் **அயல்நாட்டு விவகாரம், பாதுகாப்பு, போக்கு வரத்து, அடிப்படை உரிமைகள், நாணயம், சுங்கம்** (ஏற்றுமதி,இறக்குமதிக்கான(சுங்கம்) **திட்டமிடுதல்** ஆகியவற்றைக் கவனிக்கும். (இந்தப் பட்டியலில் தொழில்கள், தொழிலாளர், விவசாயம், சட்டம்—ஒழுங்கு, காவல்துறை, கல்வி, சுகாதாரம், உணவு போன்றவை எதுவும் இல்லை என்பதை கவனியுங்கள்!) மற்ற எல்லா அதிகாரங்களும் மாநிலங்களுக்கேஇருக்கும்! மத்திய அரசுக்கு என்று ஒதுக்கிய இந்த 7 அதிகாரங்களைத் தவிர, பாக்கி அனைத்து அதிகாரங்களும் மாநிலங்களுக்கே.

குழப்பத்துக்கு இடமின்றி, திட்டவட்டமாக எடுத்துக் கூறினார்கள். ஆனால், அதிகாரபீடம் ஏறியவுடன் இந்த வாக்குறுதிகள், தீர்மானங்கள், தேர்தல் அறிக்கைகள், கருத்துக்கள் ஆகிய அனைத்தையும் மூட்டை கட்டிக் குப்பைத் தொட்டியிலே போட்டார்கள்: கூச்சநாச்சமின்றி அவ்வளவையும் கைவிட்டனர். ''பலமான மத்திய சர்க்கார் வேண்டும். அதற்காக மத்தியிலே அதிகமான அதிகாரங்கள் இருக்க வேண்டும். மாநிலங்களுக்கு சுயாட்சி கோருவது தவறு'' என்று ஆரம்பித்தனர்,

## அதிகாரக் குவியல்

அரசியல் சாசனம் தயாரித்தபொழுதே, தங்களது பழைய மாநில சுயாட்சி—மாநிலங்களுக்கு எஞ்சிய அதிகாரங்கள்—என்ற அடிப்படைகளை அடியோடு கைவிட்டனர். 1935-ல் எந்த அரசியல் சாசனச் சட்டத்தை வெள்ளையன் திணித்தானோ—எதை எதிர்த்து இதே தலைவர்கள் கிளர்ச்சி செய்தார்களோ—அதே அரசியல் சாசனத்தை, தங்களுக்கு முன் மாதிரியாகக்கொண்டனர்! மத்திய அரசிடமே குவியலாக அதிகாரங்கள் இருக்கும் முறையில் அரசியல் சாசனத்தைத் தயாரித்தார்கள்.

இந்த அரசியல் சாசனத்தில் 7-வது அட்டவணை என்ற ஒரு பகுதி இருக்கிறது. அதில் 3 பட்டியல்கள் இருக்கின்றன. முதல் பட்டியல் மத்திய அரசுக்கு உள்ள அதிகாரங்களைக் குறிக்கும் பட்டியல் இதற்கு பெயர் யூனியன் பட்டியல். இரண்டாவது பட்டியல் ராஜ்ய (மாநில) அரசுகளுக்குள்ள அதிகாரங்களைக் குறிக்கும் பட்டியல். இதற்கு ராஜ்ய பட்டியல் என்று பெயர். மூன்றாவது பட்டியலான ''பொது''ப் பட்டியல், மத்திய அரசு, மாநில அரசு ஆகிய இரண்டுக்கும் பொதுவான கூட்டுப்பட்டியல்.

இந்தப் பட்டியல்களின் அத்தனை விவரங்களுக்கும் நாம் போகத் தேவையில்லை. அவ்வாறு அவற்றுக்குள் நுழைந்தால், நமது இன்றைய தேவையை மீறி கதை வளரும்; ஒரே அறுவையாகவும் இருக்கும்! சுருக்கமாகச் சில முக்கியமான ''சிறப்புகளை'' மட்டும் கவனித்தால் போதும்:

1) யூனியன் பட்டியலில் 97 அயிட்டங்கள் உள்ளன. சமஷ்டி அரசுக்கு 7 அதிகாரங்கள் போதும் என்றவர்கள்— குறைந்தபட்ச ('மினிமம்') அதிகாரங்கள் போதும்என்றவர்கள்—அதிகபட்ச அதிகாரங்களை— 97-ஐ எடுத்துக்கொண்டனர். மாநிலங்களுக்கு அதிகபட்ச அதிகாரம் தரப்படவேண்டும் என்றவர்கள், மாநிலப் பட்டியலில் 66 அயிட்டங்களைத்தான் வைத்தனர்! இருவருக்கும் பொது என்ற கூட்டுப் பட்டியலில் 47 அயிட்டங்கள் இருக்கின்றன.

2) எண்ணிக்கையில் மிகவும் அதிகமான அயிட்டங்கள் யூனியன் பட்டியலில் இருக்கின்றன என்பது மட்டுமல்ல—அநேகமாக முக்கியமான அதிகாரங்கள் அனைத்தையும் அதிலே சேர்த்துக் கொண்டார்கள். பாதுகாப்புக்கும் யுத்தத்துக்கும் தொடர்புள்ள தொழில்கள் என்றும், ''பொதுநலனுக்கு அவசியம்'' என்று நாடாளுமன்றம் கருதக்கூடிய தொழில்கள் என்றும்—இந்த இரண்டு அயிட்டங்களுக்குள், நாட்டில் உள்ள அனைத்துத் தொழில்களையும் தங்களது அதிகார வரம்புக்குள் கொண்டுபோய் விட்டார்கள்! அது மட்டுமல்ல; அதிகமான வருவாயைத் தேடித்தரும் வரி இனங்களை யெல்லாம் மத்திய அரசுக்கே ஒதுக்கிக்கொண்டார்கள். நிலத்திலிருந்துவரும் வருமானம் நீங்கலாக, பாக்கி எல்லா வருமானங்கள் மீதும் வரி விதிக்கும் அதிகாரம் மத்திய அரசுக்கு: சுங்க வரி — ஏற்றுமதி மீதும் இறக்குமதி மேலும் போடப்படும் வரிகளும் மத்திய அரசுக்கே; தொழில்களில் உற்பத்தியாகி விற்பனைக்கு வரும் அனைத்துச் சரக்குகளின் மீதும் போடக்கூடிய கலால் வரியும் மத்திய அரசுக்கே; கம்பெனிகளின் மீது வரி விதிக்கும் அதிகாரமும் மத்திய அரசுக்கே; நிலமில்லாத இதர மூலதன ஆஸ்திகள் மீது — தனிநபருடையதோ, கம்பெனிகளுடையதோ — வரிவிதிக்கும் அதிகாரமும் மத்திய அரசுக்கே; அதாவது வளரும் வசதியுள்ள வரி இனங்கள் அனைத்தையும்—விற்பனை வரி என்ற ஒன்றைத் தவிர—மத்திய அரசு அமுக்கிக் கொண்டுள்ளது!

3) இவைபோக, மத்திய அரசுக்கான யூனியன் பட்டியிலே இடம்பெறும் இதர சில அதிகாரங்களையும் பாருங்கள்— சினிமாப்படம் காட்டுவதற்கு அனுமதி வழங்கும் அதிகாரம்—புராதன வரலாற்றுச் சிறப்புள்ள கட்டிடங்கள், புதைபொருள்கள் அவையுள்ள இடங்கள் ஆகியவைகளைப் பராமரிக்கும் அதிகாரம்—செய்தித்தாள்களது விற்பனை மீதும், அவற்றில் செய்யப்படும் விளம்பரங்கள் மீதும், வரிவிதிக்கும் அதிகாரம், (பெரியது, சிறியது என்று தாரதம்மியமில்லாமல் அவ்வளவையும் தூக்கி விழுங்குகிற

றனர்)......ராஜ்ய சர்க்கார்களது கணக்குகளை தணிக்கை செய்யும் அதிகாரம்......!

4) இவ்வளவும் போதாதென்று, யூனியன் பட்டியலில் 97-வது அயிட்டத்தைப் பாருங்கள்:- "இரண்டாவது பட்டியலிலோ (ராஜ்ய அரசின் பட்டியல்) மூன்றாவது பட்டியலிலோ (கூட்டுப்பட்டியல்) இடம்பெறாத மற்ற எந்த விஷயமும்" என்று கூறுகிறது இது. இதன்பொருள் புரிகிறதா? எஞ்சிய அதிகாரங்கள் மாநிலங்களுக்கே என்று 1946 வரை சொல்லி வந்தார்கள் அல்லவா? அதை இங்கு தலைகீழாக மாற்றிவிட்டனர். எஞ்சிய அதிகாரங்கள் அனைத்தும் மத்திய அரசுக்கே என்று இங்கு எழுதிக்கொண்டனர். இதைச் சந்தேகத்துக்கிடமில்லாது செய்ய, அரசியல் சாசனத்தின் 9-வது பகுதியில் 248-வது பிரிவில் 'கூட்டுப் பட்டியலில் அல்லது ராஜ்யபட்டியலில் சொல்லப்படாத எந்த விஷயம் பற்றியும், சட்டம் செய்யும் அதிகாரம் **நாடாளு மன்றத்துக்கே** (மத்திய அரசுக்கே) உரித்தானது" என்று அழுத்தம் திருத்தமாகக் கூறுகின்றனர்!

## மூலதனக் குவியலின் விளைவு

5 மாநிலத்துக்கு மட்டுமென்று ஒதுக்கப்பட்ட பட்டியலுக்குள்ளும் சில சமயங்களில் புகுந்து விளையாட மத்திய அரசுக்கு அதிகாரம் அளிக்கிறது இந்த அரசியல் சாசனம். "தேசத்தின் நலன் கருதி" அல்லது 'அவசர காலம்' என்று சொல்லி, மாநிலப் பட்டியலுக்குள்ளும் மத்திய அரசு நுழைய அதிகாரம் உண்டு! கூட்டுப்பட்டியலுக்குள் எப்பொழுதும் நுழைய மத்திய அரசுக்கு இடமுண்டு. அப்படி கூட்டுப் பட்டியலில் உள்ள பொருள் பற்றியோ, மேலே சொன்ன குறிப்பிட்ட சமயங்களில் மாநில அரசுக்கான பட்டியலில் உள்ள பொருள் பற்றியோ மத்திய அரசு சட்டம் இயற்றினால், இவை பற்றி மாநில அரசுகள் செய்த சட்டங்கள் செல்லாது. அதாவது, இங்கும் மத்திய அரசின் மேலாதிக்கம் நிலைநாட்டப்படுகின்றது. இவையெல்லாம் போக, பல சமயங்களில் மாநில அரசு உருவாக்கும் சட்டங்களுக்கு, ஜனாதிபதியிடம் (அதாவது, மத்திய அரசிடம்) முன் அனுமதி (சட்டமன்றத்திற்குள் இதற்கான மசோதாக்களை முன் வைப்பதற்கு முன்) பெறவேண்டும். பின்னர் சம்மதமும் பெறவேண்டும். சட்ட மன்றத்தில் நிறைவேறியபின் ஜனாதிபதியின் சம்மதம் வாங்கப்பட வேண்டும்!

6) மத்திய அரசின் "பேய்ப்பசி"க்கு அளவே இல்லை! மான வெட்கம் இல்லாத பசி அது! சட்டத்தையும் ஒழுங்கையும் பராமரிக்க வேண்டியது மாநில அரசின் பொறுப்பு. மாநில அரசுக்கான பட்டியலில் இதுவும் இதற்கான காவல் துறையும் வருகின்றன.

மத்திய அரசு பட்டியலில் இதைப்பற்றி பேச்சே இல்லை. இருப்பினும் மத்திய ரிசர்வ் போலீஸ் என்று ஒரு படையை நிறுவி, ''சட்டம்—அமைதி'' ஆகியவற்றைக் காக்கும் வேலையையும் மத்திய அரசு எடுத்துக் கொண்டது—மாநில அரசுகள் செய்வதற்குமேல். இதை கல்கத்தா உயர்நீதி மன்றம் சமீபத்தில் செல்லாது என்றும், அரசியல் சாசனத்திற்குப் புறம்பானது என்றும் தீர்ப்புக் கூறியுள்ளது. ''இல்லை. இல்லை, எங்களுக்கு இதையும் செய்ய அதிகாரம் உண்டு'' என்று வாதாட மத்திய அரசு சுப்ரீம் கோர்ட்டுக்குப் போயுள்ளது மற்ற ஆசைகளைப்போல் இந்த அதிகார ஆசையும் வெட்கமறியாது!

7) இவை எல்லாம் போக கல்வி, சுகாதாரம், விவசாயம் ஆகியவை எல்லாம் மாநிலங்களுக்கானப் பட்டியலில் மட்டும் உள்ளவை. இருந்தாலும் இவற்றையும் விடமாட்டோம் என்று—இந்த ஒவ்வொன்றுக்கும் ஒரு இலாகாவும், அந்தந்த இலாகாவுக்கு ஓர் அமைச்சரும், அமைச்சகமும் வேறு! (சுதந்திரம் பெறுவதிற்கு முன் அவர்கள் குறிப்பிட்ட 7 அதிகாரங்கள் எங்கே? அவர்கள் இப்பொழுது எடுத்துக் கொண்டும்; மேலும் எடுத்துக் கொள்ள எத்தனித்துக் கொண்டிருக்கும், அதிகாரங்கள் எங்கே?) இவைகளிலும் அனைத்திந்திய 'சர்வீஸ்'களை அமைக்கவேண்டும் என்று பேசுகின்றனர்—ஐ. ஏ. எஸ். மாதிரி அதாவது மாநில சர்க்காரிடம் உள்ள அற்பசொற்பத்திலும் கைவைக்கத் துடிக்கிறார்கள்.

8) கவர்னர்களை நியமிக்கும் அதிகாரம் அவர்களுடையது. அந்தக் கவர்னர்களை மத்திய அரசின் ஏஜெண்டுகளாக—தங்களது அரசியல் தேவைகளுக்குத் தகுந்தபடி ஆடும் ஏஜண்டுகளாக எப்படிப் பயன்படுத்துகிறார்கள் என்பதை இந்த நாடு. கடந்த 25 ஆண்டுகளில்—குறிப்பாக கடந்த 5 ஆண்டுகளில் பார்த்திருக்கிறது. தங்களுக்குப் பிடிக்காத மாநில அரசுகளைக் கவிழ்ப்பதற்கான சூழ்ச்சி மையமாகவும், கருவியாகவுமே இவர்கள் பயன்படுத்தப்படுகின்றனர். ஹைகோர்ட் நீதிபதிகளை நியமிக்கும் அதிகாரங்களும் மத்திய அரசுடையவையே; ஐஏ எஸ். அதிகாரிகள் அனைவரும் மத்திய அரசின் கட்டுப்பாட்டுக்குட்பட்டவர்களே. அவர்கள் ஒரு மாநிலத்தில் வேலை செய்தாலும், அந்த மாநில அரசு அவர்கள்மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்க முடியாது!

இவ்வாறு, அதிகாரங்களும் நிதிவசதிகளும், மத்திய அரசிடம் குவிக்கப்பட்டுள்ளன. பெயருக்குத்தான் ''சமஷ்டி, கூட்டாட்சி'' என்பதெல்லாம். உண்மையில் இந்திய அரசியல் சாசனம் ஓர் ஒற்றியத்தைத்தான் படைத்துள்ளது. மாநிலங்கள் மிகப் பெரும்பாலான காரியங்களுக்கு டில்லியை எதிர்நோக்கி நிற்கவேண்டியுள்ளன. அதிகாரப்பிச்சை கேட்டு, நிதிப்பிச்சை கேட்டு மன்றாடிக் கொண்டிருக்கும் நிலையில், மாநில அரசுகள் இருக்கின்றன. ஒவ்வொரு மாநில அரசும் மத்திய அரசிடம் பல நூறு கோடி ரூபாய் கடன்பட்டு

கண் கலங்கி நிற்கின்றது வருடாவருடம் கட்டவேண்டிய வட்டிக்கே வாயிதா கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். மந்திரி மாற்றி மந்திரி டில்லிக்குக் காவடி எடுப்பதும் திரும்புவதுமாக இருக்கிறார்கள் —ஒவ்வொரு மாநிலத்திலும்.

# வாதாடி வாங்க முடியாது; போராடிப் பெற வேண்டும்

இவ்வாறாக, ஏகபோக மூலதனத்தை வளரச் செய்து அதற்குத் துணையாக நின்று, மொழிவழி மாநிலங்களை—பல்லைத் தட்டிப் பிடுங்கி எடுக்கும்வரை - அமைக்க மறுத்து இந்தி ஆதிக்கத்துக்குத் தீவிரமாக முனைந்து, முட்டி உடைந்தபின் சற்றுப் பின் வாங்கி மாநில சுயாட்சி என்ற செம்மையான ஜனநாயகக்கொள்கையை நிராகரித்து மத்தியிலே அதிகாரங்களை குவித்துக்கொண்டு போகும் காங்கிரசின் நடைமுறைகளே இந்தியாவில் ஒற்றுமை உணர்வு குன்றுவதற்கும், பிரதேச உணர்வுகள் மேலோங்குவதற்கும், அடிப்படையான காரணங்களாகும். **மூலதனக் குவியலின் நேர்விளைவே அதிகாரக் குவியல்.** எனவே, நமது கட்சியைப் பொறுத்த மட்டில், மாநில சுயாட்சிக்கானபோராட்டம் என்பது அதிகாரங்களைப் பரவலாக்குவது என்பதற்கான போராட்டம் என்பது, ஏகபோக மூலதனத்தை எதிர்த்து நடத்தப்படும் போராட்டத்தின் பிரிக்கமுடியாத பகுதியே, மக்களின் ஜனநாயக உரிமைகளுக்காகவும், வாழ்க்கை வசதிகளுக்காகவும் மத்தியஅரசை எதிர்த்து, ஏகபோக முதலாளிகளது அரசை எதிர்த்து, அதன் கொள்கைகளை எதிர்த்து எப்படிப்போராட வேண்டியுள்ளதோ, அதே மாதிரி அந்த அரசை எதிர்த்து போராடிப் பறிக்க வேண்டிய ஒன்று மாநிலசுயாட்சி என்பது. அனைத்து மாநிலங்களிலும் உள்ள அனைத்துக் கட்சிகளுக்குப்பின்னாலும் திரண்டிருக்கக் கூடிய, அல்லது எக் கட்சிக்குப் பின்னாலும் இல்லாத அனைத்து ஜனநாயக சக்திகளையும் திரட்டி மத்திய அரசை எதிர்த்துப் பெரும்போர் நடத்தி பெறவேண்டியது இது.

தி. மு. க. வினருக்கு இந்த விஷயத்தில் இப்படிப்பட்ட பார்வை இல்லை. ''புரியாத'' இந்திராகாந்திக்கும் அவரது சகாக்களுக்கும் ''புரிய''வைக்க வேண்டும். அதற்கு இந்திராகாந்தி வாய்ப்பு அளித்தால் கலைஞரே நேரில் சென்று விளக்கம் கொடுத்து ''புரிய''வைத்து விடுவார் என்று எண்ணுகிறார்கள். ''தாய்பட உரைத்து'', பதமாகப் பேசி பெற்று விடலாம் என்று கனவு காண்கின்றனர். கருணாநிதி பாஷையிலே சொல்ல வேண்டுமென்றால் ''பதினாறு அதிகாரங்களைக் கேட்டேன். திருமதி இந்திராகாந்தி 'தம்பி இந்தா பிடி 10 'அதிகாரங்களை' என்று கொடுத்து விடுவார்'' எனக் கருதுகிறார்கள்.

சமீப காலத்தில் இன்னும் ஒரு சாமர்த்தியம் செய்து வருகிறார்கள். மாநாடுகள் கூட்டி, அதில் 2-வது 3-வது மட்டத் தலைவர்கள் மூலம் ஆவேசப் பேச்சுக்கள் பேசச் செய்கிறார்கள். மத்திய அரசை எதிர்த்து அனல் கக்கும் பேச்சுகள் நடக்கின்றன. அதே சமயத்தில் கருணாநிதியும்—ஓரிரண்டு இதர முதிர்ந்த தலைவர்களும் "ராஜ தந்திரமாக" பேசுகிறார்கள். மத்திய அரசிடம் பேச்சு வார்த்தைகள் நடத்தி காரியத்தை கைகூட வைக்க முடியும் என்ற நம்பிக்கையை வெளிப்படுத்துகின்றனர். கட்சி அணிகளது ஆவேசத்தைத் தட்டி விட்டு, மத்திய அரசுடன் பேரம் பேசுவதற்கான வலுவைப் பெருக்கிக் கொள்ளும் ஏற்பாடு இது.

இந்த சாமர்த்தியங்களும், சாகசங்களும் ஏகபோக மூலதனத்தின் பிரதிநிதிகளிடம் பலிக்காது என்பதை, நாட்டு மக்கள் தெளிவாகத் தெரிந்திருப்பது அவசியம். பொட்டி ஸ்ரீராமுலுவின் உயிர்த் தியாகமும் அதனால் எழுந்த ஆந்திர மக்களின் போராட்டப் பேரெழுச்சியும்தான், ஆந்திர மாநிலத்தைப் பெற்றெடுத்தன—நயமான வார்த்தைகளல்ல. 200க்கு மேற்பட்ட மராட்டிய வீரர்கள் காங்கிரசாட்சியின் துப்பாக்கி ரவைகளை நெஞ்சிலே ஏந்தி, பம்பாய் நகரத்தின் ரஸ்தாக்களை, தங்களது சூடான ரத்தத்தினால் சிவப்பாக்கித்தான் மராத்தி மாநிலத்தைப் பெற்றெடுத்தனர் — இதமாகப் பேசியல்ல. சந்த் பாதேசிங், உண்ணாவிரதம் மேற்கொண்டு, எல்லையோரம் உள்ள பஞ்சாப் எரிமலையாக வெடிக்கும் என்ற அபாயம் ஏற்பட்ட பின்னர்தான், பஞ்சாபிமொழி பேசும் பஞ்சாபி மாநிலமும், இந்திபேசும் ஹரியானாவும் பிரிக்கப்பட்டன. இது, மொழிவழி மாநிலங்கள் அமைந்த வரலாறு.

மொழிகளின் சமத்துவம் மறுக்கப்பட்டு, இந்தியை அனைத்து மாநில மக்கள் மீதும் திணிக்க முற்பட்டபொழுது, பேச்சுவார்த்தைகளா அதை நிறுத்தியது? 1965ஜனவரியில் தமிழகம் கண்டகாட்சி இதற்குள்ளாகவா மறந்து போனது? தமிழ் மக்களின் கோபாவேசம் தமிழகத்தில் 3, 4 நாட்களுக்கு நிர்வாகத்தையே சீர்குலைத்துவிடவில்லையா? எத்தனை மாணவ— மாணவிகளும் வாலிபர்களும் தாய்மொழிக்காக இன்னுயிர் ஈந்தனர். அதே சமயத்தில் கேரளத்திலும், ஆந்திரத்திலும், வங்கத்திலும் இந்தித் திணிப்பை எதிர்த்து மக்களது எழுச்சி— இவைதான் மத்திய அரசை பின்வாங்க வைத்தன— அறிவுரைகளல்ல.

மாநில சுயாட்சி என்பது, மேலே சொன்ன இரண்டு விஷயங்களைக் காட்டிலும், பெறுவதற்குக் கடுமையானது. ஏகபோகமாக அனுபவிக்கப்பட்டுவரும் அதிகாரங்களில் பங்கு கேட்கிறோம். அனைத்து மாநிலங்கள் மீது அவர்களுக்கு உள்ள பிடியைத் தளர்த்த வேண்டும் என்று கேட்கிறோம்— எனவே, இதைப் பெற ஏற்கனவே செய்ததைவிட அதிக தியாகம் செய்து, ஏற்கனவே நடந்தவற்றை

விட மிகமிக விரிவான வெகுஜனப் போராட்டங்களை நடத்தி, மறுக்க முடியாத நிர்ப்பந்தத்தை ஏற்படுத்தியாகவேண்டும். பேராசை வெறிபிடித்த கொடுங்கோன்மைக்காரர்களது இஷ்டமில்லாத கரங்களில் இருந்து, பிடுங்கி எடுத்தாகவேண்டும். இந்திரா காந்தி வளர்ந்த ''ஜனநாயகத் தொட்டில்'' பற்றி வசனம் பேசியல்ல! மத்திய அரசுடன் ஒத்துழைக்கிறோம் என்றும், அதன் ''முற்போக்குக் கொள்கைகளை'' ஆதரித்து வருவோம் என்றும் பேரம் பேசிப் பார்ப்பதன் மூலம் அல்ல!

# தி. மு. க. அரசின் நடப்பு

மாநில சுயாட்சி கோரும் தி. மு. க. வின் நடப்புகள் எப்படி இருக்கின்றன! பேச்சுக்கள் தடபுடல்தான்! ஆனால் நடப்பு என்ன?

உள்ள அதிகாரங்களை, உழைக்கும் மக்களுக்கு ஆதரவாகப் பயன்படுத்துகிறார்களா? குமரி மாவட்டத்தில் தமிழக அரசின் ரப்பர் தோட்டங்களில் வேலை பார்க்கும் தொழிலாளிகள் 75 நாட்களாக வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர். எதற்காக? தனிப்பட்ட முதலாளிகளது ரப்பர் தோட்டங்களில் தரும் கூலியைக் கேட்டு மூன்றாண்டுகளாகக் கெஞ்சிப் பார்த்து, வேறு வழியின்றி வேலை நிறுத்தத்தில் இறங்கியுள்ளார்கள்! இந்த அக்கிரமத்தை தொழிலாளர் நலக் கொள்கை என்பதா? அதோ—வால்பாறை மலை முடக்குகளில் 40000 தமிழ் உழைப்பாளிகள் தமிழக அரசு செய்து வைத்த மிக மிக கேவலமான ஒப்பந்தத்தை எதிர்த்து போராடிக்கொண்டிருக்கின்றனர். தேயிலை உற்பத்தியில், தமிழகத் தேயிலை காடுகள்தான் இந்தியாவிலேயே அதிகமான லாபம் தருபவை. இந்தியாவிலேயே மிகக் குறைந்த கூலி கிடைப்பது தமிழக தோட்டத் தொழிலாளிகளுக்கே. கிடைத்து வரும் நாட்கூலி ரூ. 3 ஐ ரூ. 5 ஆக்கவேண்டும் என்று மிகவும் நியாயமாக தொழிலாளர்கள் கேட்டால், தொழிலாளர் நல அமைச்சர் திரு. என். வி. நடராசன் ''15 பைசா'' வாங்கிக்கொள்ளுங்கள் என்கிறார். இதுதான் தொழிலாளர் நலனு?...... இப்படி எண்ணற்ற உதாரணங்களை அடுக்கிக்கொண்டே போகலாம்.

தொழிலாளர் நலனைப் பேணாதது மட்டுமல்ல; நீதி கோரிப் போராடும் தொழிலாளர்களை போலீசைக் கொண்டு எவ்வளவு கொடுமைப் படுத்த முடியுமோ, அவ்வளவும் செய்யப்படுகிறது. வால்பாறை தோட்டத் தொழிலாளர்கள் 300 க்கு மேற்பட்டவர்கள் சிறைகளிலே, வீடுகளிலும், காடுகளிலும் புகுந்து கண்மூடித்தனமான தடியடி, குடியிருப்புகளை விட்டு வெளியேற்றி காடுகளுக்குள் விரட்டும் கொடுமை. இதைத்தானே காங்கிரசாட்சியில் தமிழ் நாட்டுத் தொழிலாளி மக்கள் அனுபவித்தனர்! அந்த மக்களது இன்றைய

அனுபவம் அதற்கு மாறாக இல்லையே! தஞ்சை மாவட்ட விவசாயத் தொழிலாளி பார்ப்பதும் இதுதானே!

தொழிலாளர் நலன் பேணும் அதிகாரம், இன்று கூட மாநில அரசுக்கு உரியதே. அப்படி இருந்தும் நியாயமான கிராஜுவிட்டிக்கான ஒரு சட்டத்தை நிறைவேற்றினார்களா? அது மத்திய அரசு செய்யட்டும் என்று கையைக் காட்டுவானேன்?

உள்ள அதிகாரத்தைக்கொண்டு என்ன சட்டம் செய்ய முனைந்துள்ளனர், தெரியுமா? தொழிலாளர்கள் இஷ்டபூர்வமாக, ரகசிய வாக்கெடுப்பின் மூலம், தங்களுக்கு வேண்டிய சங்கத்தை தேர்ந்தெடுக்கும் உரிமையை மறுக்க—தொழிலாளர்களது ஒரே ஆயுதமான வேலை நிறுத்த உரிமையைப் பறிக்க— கட்டாய மத்தியஸ்தத்தைத் தொழிலாளர்கள் மீது திணிக்க—மசோதா தயாரித்துள்ளார்கள்! இவ்வளவு படுமோசமான தொழிலாளர் விரோத மசோதாவை முன்வைக்க இதுவரை எந்த மாநில அரசுக்கும் துணிச்சல் வரவில்லை. ஒருவேளை இவர்கள் இதனைச் சட்டமாக்கியபின், மற்ற மாநில அரசுகளும் இவர்களை பின்பற்றலாம்!

இது மட்டுமா? தொழில் வளர்ச்சி பற்றி தி. மு. க. வின் கொள்கை என்ன? "கலப்படப் பொருளாதாரமும், கூட்டுத்துறை"யும்தானே? வெளிநாட்டு முதலாளிகளை, தமிழகத்தில் முதலீடுசெய்ய அழைப்பதுதானே? இவற்றில் காங்கிரசுக்கும் தி. மு. க. வுக்கும் என்ன வித்தியாசம்?

கிராமப்புறத்தில், மத்திய அரசு பின்பற்றும் பசுமைப்புரட்சி வழிதானே தி. மு. க. வழி? அதாவது, அரசு மூலம் கிடைக்கும் கடன் வசதிகளை—டிராக்டர் வாங்க, பம்பு செட்டு வாங்க—ரசாயன உரம் வாங்க, விசேஷ வித்துக்கள் வாங்க—கிராமப் புறங்களில் உள்ள வசதிக்காரர்களுக்கு அளித்து, அவர்கள் அதிக ஆதாயம் அடையவும், கிராமங்களில் வேலையில்லாத் திண்டாட்டமும் வறுமையும் வளரவுமான வழிதானே அது? இதிலும் வேறுபாடில்லை!

அதாவது, திட்டவட்டமாக நாட்டில் உள்ள பெரும்பாலான உழைக்கும் மக்களுக்கு எதிர்காலத்தில் நம்பிக்கை அளித்து, அவர்களை முன்னேற்றி அழைத்துச் செல்லக்கூடிய ஜனநாயக சக்திகளை பலப்படுத்தக்கூடிய, மாற்றுக் கொள்கைகள் இல்லையே. "மாநில அரசுக்கு இன்ன, இன்ன அதிகாரங்கள்தான் இருக்கின்றன. இவற்றைக்கொண்டு நகர்ப்புற, கிராமப்புற உழைக்கும் மக்களுக்காக இன்ன, இன்ன சட்டங்களும் சலுகைகளும் வழங்கியுள்ளோம். இதற்கு மேல் செய்ய அதிகாரம் இல்லை. மத்திய அரசு குறுக்கே நிற்கின்றது. எனவே மத்திய அரசிடமிருந்து மாநிலத்துக்கு கூடுதலான அதிகாரங்களைப் பெற, எங்களுக்கு ஆதரவு தாருங்கள்" என்று, இன்று தி.மு.க. தலைவர்கள் கேட்க முடியுமா? முடியாது.

தி. மு. க. அரசின் நடைமுறைகளால், தமிழக உழைப்பாளி மக்கள் கசப்படைந்து வருகின்றனர். பல இடங்களில் பல மட்டங்களில் கட்சிக்கும், நிர்வாகத்துக்கும் வித்தியாசமே தெரியாத நிலையும், லஞ்சமும், ஊழலும் பெருகிக்கொண்டே போவதும், படிப்பாளிமக்கள் மத்தியிலும் கசப்பை வளர்த்துக்கொண்டிருக்கிறது இந்நிலையில் ''மாநில சுயாட்சி'' என்று கோஷம் எழுப்பினால், எப்படி மக்களது ஆதரவைத் திரட்டமுடியும்? அவர்களது சொந்தக் கட்சியின் அணிகளையும், விசுவாசம் உள்ள மக்களை மட்டும் தானே திரட்ட முடியும்! இந்த கோஷத்தின் நியாயத்தை ஏற்கக்கூடிய அனைத்துக்கட்சிகளுக்கும் பின்னால் உள்ள ஜனநாயக சக்திகளைத் திரட்ட முடியாது.

நாம் சொல்லும் விதத்தில், காங்கிரசின் கொள்கைகளுக்கு உண்மையில் மாற்றான ஜனநாயகக் கொள்கைகளை முன் வைத்து, உழைப்பாளி மக்களை, ஜனநாயக சக்திகளை திரட்ட முடியாத நிலையில் கலைஞர் என்ன என்ன சொல்கிறார்? ''ராஜராஜன் சிலையை தஞ்சைப் பெரிய கோவிலுக்குள் வைக்கமுடியவில்லையே...இதற்கு அதிகாரம் இல்லையே'' என்று பேசுகிறார்! மாநில சுயாட்சி என்று உழைக்கும் மக்களது ஜனநாயக கோரிக்கைக்கு இதுதான் இலக்கணமா!

வேறு பல சமயங்களில் கருணாநிதியும் அவரது சகாக்களும் தொழில்களைத் துவக்க முதலாளிகளுக்கு லைசென்சு வழங்கும் அதிகாரத்தை மட்டும் வலியுறுத்திக் கேட்கிறார்கள். மாநில சுயாட்சி என்பதே தமிழ்நாட்டு முதலாளி வர்க்கத்துக்கான ஒரு வசதிதானா! இந்த அதிகாரமும் மாலநிலத்துக்குஇருக்கவேண்டும் என்றுதான் நாம் கருதுகிறோம். ஆனால் இதுமட்டும் தானா மாநில சுயாட்சி என்பது! மாநிலத்தில் உள்ள உழைப்பாளி மக்களுக்கு மாநில சுயாட்சி மூலம் என்ன கிடைக்கும் என்று, ஏன் கருணாநிதியா இதர அமைச்சர்களோ சொல்லமுடியவில்லை! அப்படிச் சொல்லாத வரை, எப்படி உழைக்கும் மக்களது ஆதரவைப்பெற முடியும்?

# நமது அடிப்படையான பார்வை

விஞ்ஞான சோஷலிசம் இன்றி, நமது நாட்டு மக்களுக்கு வேறு கதிமோட்சம் கிடையாது—எந்த நாட்டு மக்களுக்கும் கிடையாது. அதை நோக்கி நமது மக்களை அழைத்துச்செல்லும் பெரும் பாதையில் இன்று—இப்பொழுது நமது மக்கள் நிறைவேற்றவேண்டிய புரட்சி— மக்கள் ஜனநாயக புரட்சி கிராமப்புறங்களில் நிலவும் பழைய நிலப்பிரபுத்துவ முறைகளையும் புதிய நில முதலாளித்துவத்தையும் ஒழித்துக்கட்டி **உழவனுக்கே** (வேறு எவருக்கும் நிலம் இல்லை) நிலத்தைச் சொந்தமாக்கவேண்டும். நமது மக்கள் உற்பத்தி செய்யும் செல்வத்தில், ஒவ்வொரு வருடமும் பலபலகோடிருபாய்களை லாபமாக வட்டியாக, டிவிடெண்டுகளாக—இன்னும் பல உருவங்களில், நமது

செல்லும் அந்நிய மூலதனக்கொள்ளையர்
நாட்டில் இருந்து அள்ளிச் செல்லும் அந்நிய மூலதனக்கொள்ளையர்
களது கூடிவரும் பிடிப்பை அடியோடு அறுத்து எறியவேண்டும், இந்த
இரண்டு பேய்களையும் கூடி காப்பாற்றி ஊட்டி வளர்க்கும் பெரு
முதலாளிகளின் தொழில்களையும் வர்த்தகத்தையும் மக்கள் கைப்
பற்றியாக வேண்டும் இவற்றைச் செய்ய வேண்டுமெனில், இந்தப்
பெரு முதலாளிகளின் ஆதிக்கத்தில் உள்ள, அவர்களது பிரதிநிதி
களால் நடத்தப்பட்டுவரும் மத்தியப் பேரரசைப் புரட்சியின் மூலம்
தூக்கிய எறிய வேண்டும் அதன்பின் அமையும் புரட்சி அரசு—
மக்கள் ஜனநாயக அரசு தான்—மேலே சொல்லியுள்ள மூன்றுபுனிதமான
புரட்சிக் கடமைகளையும் செய்து முடிக்கும். இந்தப் புரட்சிக்
கடமைகளை நிறைவேற்றாமல் சோஷலிசம்
என்பது இல்லை. அந்நிய மூலதனத்துக்கு அனுதினமும்
அழைப்பு விடுத்துக்கொண்டு, உள் நாட்டில் பெரு முதலாளிகளை
நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்துக்
கொண்டு, கிராமப்புறங்களில் பெரு நிலச்சுவான்கள் தங்களது நில
உடைமைகளை கட்டிக் காப்பாற்றிக் கொள்வதற்கென்றே சட்டங்
கள்—சந்து பொந்துகள் நிறைந்த சட்டங்கள்—செய்துகொண்டு
சோஷலிசம் பேசுபவர்களை, வடிகட்டிய அயோக்கியர்கள் என்று
சொல்வதைத் தவிர, நமக்கு வேறு வார்த்தைகள் இல்லை.

எனவே, மத்தியப் பேரரசை எதிர்த்து, அதனை முறியடிக்க, இந்திய மக்கள் அனைவரையும், அனைத்து ஜனநாயக சக்திகளையும் ஒன்றுதிரட்ட வேண்டிய பெரும்பணி, நம்முன் உள்ளது. அரக்கத் தனம் நிறைந்த அதிகார, ராணுவ பலத்துடன் மக்களை ஒடுக்கிக் கொண்டுள்ள இந்த அமைப்பைத் தூக்கியெறியும் வேலையை எந்த ஒரு மாநில மக்கள் மட்டும் செய்துவிட முடியாது.

பல்வேறு வரலாற்று காரணங்களால், இந்திய மக்கள் மத்தியில் ஒற்றுமை உணர்வு வளர்ந்து வந்திருக்கிறது. அந்நியனை அரசியல் அதிகாரத்திலிருந்து விரட்ட—அரசியல் அடிமைத் தளத்திலிருந்து இந்தியாவை மீட்கப் போராடிய காலத்தில், அந்த ஒற்றுமை உணர்வு—பல சோதனைகளுக்கு மத்தியில்—மேலும் வளர்ந்தது. இந்த ஒற்றுமை உணர்வு கிடைத்தற்கரிய பொக்கிஷமாகும். அதனைப் பேணி வலுப்படுத்துவது மக்கள் ஜனநாயக மறுமலர்ச்சியில் அக்கறையுள்ள அனைவரது கடமையாகும். பல்வேறு தேசங்களைக் கொண்ட இந்தியா—பல்வேறு புஷ்பங்களால் ஆன ஆரம் போல்—சிறப்புற விளங்க வேண்டும். ஏற்றத் தாழ்வுகளை நாளுக்கு நாள் அதிகரித்து, இந்திய ஒற்றுமையைச் சீரழித்துச் சின்னா பின்னப்படுத்தும் முதலாளித்துவப் பாதையிலிருந்து நாட்டை மீட்டால்தான் இந்த ஒற்றுமை நீடிக்கும். அவ்வாறு மீட்பதற்கே, இந்த ஒற்றுமையை நாம் பேணி வளர்த்தாக வேண்டும்.

நாம் இங்கு குறிப்பிடுவது, இந்திய மக்களது ஒற்றுமை; இந்தியாவில் உள்ள அனைத்து தேசங்களது மக்களுடைய ஒற்றுமை-

டாட்டா, பிர்லா, முத்தய்யா செட்டியார், கருமுத்துச் செட்டியார், டி. வி. எஸ். அய்யங்கார் ஒற்றுமையல்ல — இந்தியாவின் அனைத்து தேசங்களிலும் உள்ள வடபாதிமங்கலங்களது. பெரு மிராசுகளது ஒற்றுமையல்ல. இவர்களது ஒற்றுமையை, இவர்களது ஒன்றுபட்ட கரண்டலை, அதற்கான இவர்களது கருவியான ஆட்சியை எதிர்க்க, எதிர்த்து முறியடிக்க, இந்தியத்தொழிலாளிவர்க்கத்தின் ஒற்றுமை— உழைத்துப் பிழைக்கும் இந்திய உழவர்களது ஒற்றுமை, இந்தியப் படிப்பாளி மக்களது ஒற்றுமை— இந்த மிகமிகப் பெரும்பாலான இந்திய மக்களது ஒற்றுமையைத்தான் நாம் குறிப்பிடுகின்றோம். இந்த ஒற்றுமையைத்தான் வச்சிராயுதமாக வளர்த்தெடுத்து, இன்றைய அமைப்பை நொறுக்கியெறிந்து, புதிய இந்தியாவைச் சமைக்க வேண்டும்.

எனவேதான், இந்த ஒற்றுமையில் நமது கட்சிக்கு ஆழ்ந்த அக்கறை உண்டு. இந்த ஒற்றுமைக்கு ஊறு விளையக் கூடாது என்றால், ஒரு மாநில மக்கள்கூட, தங்களது மாநிலம் புறக்கணிக்கப்படுகிறது என்று எண்ண இடமளிக்கலாகாது. தாங்கள் ஒடுக்கப்படுவதாக எண்ண இடமளிக்கலாகாது. தங்களது மாநிலத்தின் வளம் அனைத்தும் முழுமையாக பயன்படுத்த வழி இல்லாது போகிறது என்றோ, சாத்தியமான தொழில்வளர்ச்சி காணமுடியாமல் போகிறது என்றோ எண்ண இடமளிக்கலாகாது. தங்களது மாநிலத்தின் பண்பாட்டுச் சிறப்பியல்புகளின் முழுமையான வளர்ச்சிக்கு இடமில்லாமல் செய்யப்படுவதாக எண்ண இடமளிக்கலாகாது. தங்களது மொழிக்கு தங்கள் மாநிலத்தில் உரிய இடம் அளிக்கப்படவில்லை என்றும், வேறு ஒரு மொழி தங்கள்மீது திணிக்கப்படுகிறது என்றும் எண்ண இடமளிக்கலாகாது — இது போன்ற வருத்தங்களுக்கும் கவலைகளுக்கும் இடமின்றி ஒவ்வொரு மாநில மக்களும் மனநிறைவுடன் இருக்கவேண்டும். இந்திய மக்களது ஒற்றுமை ஓங்கி வளர, இந்தியாவின் ஒவ்வொரு மாநில மக்களும் தங்களது மாநிலத்தில் உள்ள வளங்களுக்கு ஏற்ப தங்களது மாநிலம் ஏற்றம் காணும் என்றும், தங்களது மொழி, பண்பாடு ஆகியவை எந்தக் குறுக்கீடும் இன்றி, தங்குதடையற்ற வளர்ச்சி அடைய உத்திரவாதம் உண்டு என்றும் மனநிறைவு கொள்ளவேண்டும். தங்களது சுதந்திரமான வளர்ச்சிக்கு இந்தியக்கூட்டமைப்பில் எந்தக் குறுக்கீடும் இல்லை என்ற மனநிறைவு இருக்கவேண்டும். இந்த மனநிறைவு, பிளவுப் போக்குகளுக்கும் பிரிவினை எண்ணங்களுக்கும் இடமில்லாது செய்யும்.

இதனை உத்தேசித்துத்தான், நமது கட்சி ஒரு காலத்தில் எந்த ஒரு மாநிலமாவது (தேசமாவது) தனது சுதந்திரமான முழுமையான வளர்ச்சிக்கு—இந்தியக் கூட்டமைப்பில் இருப்பது உதவியாக இல்லை என்று கருதினால் அந்த மாநிலம் (தேசம்) பிரிந்து சென்று தனி அரசு அமைத்துக் கொள்ளலாம் என்றும் கூறியது. எந்த ஒரு மாநிலமும் (தேசமும்) பிரிந்து செல்லவேண்டும் என்பதற்காக நாம் அவ்வாறு சொல்லவில்லை. மாறாக, தங்களது தலைவிதியை தாங்களே நிர்ண

பித்துக்கொள்ளும்—தேவை என்று தோன்றினால் பிரிந்து சென்று தனி அரசு அமைத்துக் கொள்ளும் அளவுக்கு—சுய நிர்ணய உரிமை வைக்கூட இந்தியக் கூட்டாட்சி வழங்குகிறது என்பதே அச்சமின்றி இந்தியக் கூட்டமைப்பில் இருக்க தூண்டுகோலாக இருக்கும் என்ற கருத்தில்தான், இந்திய ஒற்றுமையை சரியான சமத்துவ அடிப்படையில் உறுதி பெறச்செய்யவே மாநிலங்களுக்கு சுயநிர்ணய உரிமை வழங்கப்பட வேண்டும் என்று அன்று நாம் கூறினோம். அரசியல் சாசனம் தயாராகிக்கொண்டிருந்த சமயத்தில், அந்த அரசியல் சட்ட மன்றத்தில் நமது கட்சியின் ஒரே பிரதிநிதியாக இருந்த தோழர் சோமநாத் லாஹிரி (இப்பொழுது அவர் வலது கம்யூனிஸ்ட் கட்சியில் இருக்கிறார்) என்பவர் இந்த உரிமை அரசியல் சாசனத்தில் இடம் பெற வேண்டும் என்று வற்புறுத்தினார்.

ஆனால் பின்னர் இந்த உரிமையை இந்த விதத்தில் நாம் வற்புறுத்தத் தேவையில்லை என்று நமது கட்சி முடிவு செய்தது. விரிவான மாநில சுயாட்சி அளிப்பது என்பதே அனைத்து மாநிலங்களுக்கும், வளர்ச்சிக்கான சமமான வாய்ப்புகளை வழங்க உத்திரவாதமாக இருக்கும் என்று நமது கட்சி கருதுகிறது. மொழிவழி மாநில அமைப்பை ஒழுங்குபடுத்தி (மகாராஷ்டிரா, மைசூர் மாநிலங்களுக்கிடையே உள்ளது போன்ற எல்லைத் தாவாக்களை தீர்த்து வைத்து) அனைத்து மொழிகளும் சமம் என்பதை அரசியல் சாசனத்தில் பொறித்து, நடப்பிலும் உறுதி செய்து, சுயாட்சி உரிமையையும் மாநிலங்களுக்கு வழங்கிவிட்டால், எவ்வித மனத்தாங்கல்களும் இல்லாமல், இந்திய மக்கள் ஒற்றுமையுடன் முன்னேற வழி உறுதிப்பட்டுவிடும். இந்த நிலையிலிருந்து தான் நமது கட்சி அத்தனை மாநிலங்களுக்கும் விரிவான சுயாட்சி அளிக்கப்பட வேண்டும் என்று வற்புறுத்துகிறது. மாநில சுயாட்சி என்பது இந்திய ஒற்றுமையை பலவீனப்படுத்தாது. அதனை வலுப்படுத்தவே, மாநிலசுயாட்சி அவசியம். மாநில சுயாட்சி உரிமையை மறுப்பதுதான் இந்திய ஒற்றுமையை பலவீனப்படுத்தும்.

நாம் சொல்லும் விதத்தில், மாநில சுயாட்சி வழங்கப்பட்டு விட்டால், அதற்குப்பின், எந்த மாநிலத்தில் உள்ள முதலாளித்துவ சக்திகளும் மாநில—தேசிய உணர்ச்சிகளைக் கிண்டிவிட்டு, பிற மாநிலங்களுக்கு எதிரான உணர்ச்சிகளை—பிற மொழிகளுக்கு எதிரான உணர்ச்சிகளைத் தட்டிவிட்டு இந்திய ஒற்றுமைக்கு ஆபத்தை உண்டாக்க முடியாது. சிவசேனைகளுக்கும், லச்சித்சேனைகளுக்கும், தமிழ்ச் சேனைகளுக்கும் கன்னட சலுவளிகாரு இயக்கத்துக்கும், இவை போன்ற இதர இயக்கங்களுக்கும் இடமின்றிப் போகும். உழைக்கும் மக்கள் அனைவரும், இந்த உணர்ச்சிகளால் திசை திருப்பப்படாமல் அடிப்படையான சமுதாய பொருளாதார மாற்றங்களுக்கான புரட்சி வேலையில் குவிந்த கவனம் செலுத்த உதவியாக இருக்கும்.

# இன்று நாம் கோரும் அதிகாரங்கள்

நாம் கூறும் மக்கள் ஜனநாயக அரசு என்பது, புரட்சியின் மூலமே— புரட்சிக்குப் பின்னரே. இன்றுள்ள இந்திய அரசியல் சாசனத்தை- சுரண்டும் வர்க்கங்களின் அடிப்படை நல உரிமைகளைப் பாதுகாப்பதற்கென்றே அம்பேத்காராலும், அல்லாடி கிருஷ்ணசாமி அய்யராலும்— இன்னும் அந்த வர்க்கங்களின் ஆற்றல் மிகுந்த அறிவாளிச் செய்நர்களாலும் தயாரிக்கப்பட்ட சாசனத்தைத் திருத்துவதன்மூலம் அல்ல.

இதன் பொருள், புரட்சி முடியும்வரை காத்திருக்கவேண்டும் என்பதல்ல. எதுவும், தற்சமயம் செய்ய முடியாது என்பதல்ல. உடனடியாக அடையக்கூடிய சில குறிக்கோள்களை உருவாக்கி, அவைகளை அரசியல் சாசனத்திற்கு திருத்தங்களாக வடித்து எடுத்து, அந்த திருத்தங்களுக்காக நாடாளுமன்றத்தில் போராட வேண்டும். நாடாளுமன்றத்துக்கு வெளியே மக்கள் மன்றத்தில் அவைகளுக்கு விரிவான ஆதரவைத் திரட்டவேண்டும்; அவற்றின் நியாயத்துக்குப் பின்னால் மக்களது பேரெழுச்சியைத் திரட்டி நிறுத்தவேண்டும்.

இதன் பொருட்டு, நமது கட்சி நாடாளுமன்றத்தில் இரண்டு மசோதாக்களை தாக்கல் செய்துள்ளது. அவை, இன்றுள்ள அரசியல் சாசனத்தின் பல பகுதிகளைத் திருத்த முற்படுகின்றன.

அத்தனை திருத்தங்களிலும் அடங்கியுள்ள எல்லா விஷயங்களுக்குள்ளும் நாம் இங்கு போகவேண்டியதில்லை மாநில சுயாட்சி என்ற கருத்துக்கு தொடர்பாக உள்ளவற்றை மட்டும் பார்த்தால் போதுமானது. அவ்வாறு செய்யும் பொழுதுகூட, அந்தத் திருத்தங்களின் வாசகங்களை அப்படியே இங்கு தரவேண்டியதில்லை. ஏனெனில் அந்த ''சட்ட-பாஷை'' அலுப்பூட்டும். அது சிக்கல் நிறைந்தது. எனவே, நாம் வற்புறுத்தும் பிரதான திருத்தங்களின் கருத்துக்களை இங்கு விளக்கினால் போதும் என்று கருதுகிறேன்.

## 1. ஜனாதிபதி ஆட்சி

எந்த மாநிலத்திலும், ''ஜனாதிபதி ஆட்சி'' என்ற மத்திய சர்க்காரின் ஆட்சியைத் திணிக்க அரசியல் சாசனத்தில் இடமே இருக்கலாகாது. தங்களது அந்தந்தக் கால அரசியல் தேவைகளுக்குகந்த முறையில் அரசியல் சாசனத்தின் பிரிவுகளை வியாக்கியானம் செய்து, தங்களுக்குப் பிடிக்காத கட்சிகள் ஆட்சிக்கு வருவதைத் தடுக்க—தங்களது வசதிக்கு ஏற்ப மத்திய அரசிடமே ஒரு மாநிலத்தின் நிர்வாகத்தை வைத்திருக்க—இந்த ''ஜனாதிபதி ஆட்சி'' என்பது மத்தியிலே ஆளும் கட்சிக்குப் பயன்பட்டு வருகிறது. தேர்ந்தெடுத்த அரசு ஒரு மாநிலத்தில் இல்லாத சமயத்தில், ஜனாதிபதி கவர்னர் மூலம் ஆட்சி செய்கிறார் என்று சொல்லிக் கொண்டு மத்தியில் ஆட்சியில் உள்ள கட்சி, தனக்குச் சாதகமான அரசியல் நிலையை அந்த மாநிலத்தில் உருவாக்க, தனது கட்சியை அந்த மாநிலத்தில் பலப்படுத்த வேலை செய்கிறது என்பது

நமது அனுபவம். இதுபோன்று எந்த மாநிலத்திலும் தலை
மத்திய அரசுக்கு இடமே இருக்கக்கூடாது. எனவே' ஜனாதிபதிஆட்
என்ற ஏற்பாட்டையே அரசியல் சாசனத்திலிருந்து எடுத்துவி
வேண்டும் என்கிறோம். ஒரு மாநிலத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டு ஆட்
யில் இருந்த கட்சி சட்டமன்றத்தில் பெரும்பான்மையை இழ
தாலோ, அல்லது ஏதாவது காரணத்தினால் அதுபோன்ற ஒரு அர
யல் நெருக்கடி ஒரு மாநிலத்தில் தோன்றினாலோ, ஆறு வாரங்களு
குள் மீண்டும் தேர்தல் நடந்துவிட வேண்டும் அந்த ஆறு வார கால
துக்கு அந்த மாநிலம், அந்த மாநில கவர்னரது (கீழ்வரும் பகுதியி
நாம் சொல்லும் விதத்தில் அமையும் கவர்னரது) பொறுப்பிே
இருக்கும்.

## 2. கவர்னர்

கவர்னர் என்பவர் இன்று ஜனாதிபதியால் (மத்திய அரசினால்
நியமிக்கப்படுகிறார். அவர் மத்திய அரசின் ஏஜெண்டே. மத்தி
அரசின் சார்பிலே இயங்குகிறார். மத்திய அரசின் தேவைகளுக்கு
தகுந்தபடி ஆடும் பொம்மையாகத்தான் இருக்கிறார். மத்திய அரசு
விரும்பினால் தேர்தல் மூலம் முதல் பெரும் கட்சியாக
வந்துள்ள கட்சியை அரசு அமைக்க அழைக்கிறார். மத்திய அரசு
விரும்பாவிட்டால் அவ்வாறு அழைக்காமல் விட்டுவிட்டு, மத்திய
அரசுக்கு இசைவான ஒரு சிறுபான்மைக் கட்சியை அழைக்கிறார்.
மத்திய அரசின் விருப்பப்படி—தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு
சட்ட மன்றத்தைக்கூட்ட விடாமல் கலைக்கிறார். மத்திய அரசுக்குப்
பிடித்தம் இல்லாத ஒரு மாநில அரசைக் கவிழ்க்க மத்திய அரசுக்கு
துணைபோகிறார். சில மாநிலங்களில் எதிர்க்கட்சி வரிசைகளில்
இருந்த எம் எல் ஏ. க்களில் பலரை கட்சி மாறச் செய்யும் திருப்
பணியில் ஈடுபடுகிறார்!

இவைகளுக்கு முற்றுப்புள்ளி வைக்க அந்தந்த மாநிலச் சட்ட மன்றம், தனது கவர்னரை தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும் என்கிறோம். அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட கவர்னர், சாதாரணமாக 5 ஆண்டுகள் பொறுப்பில் இருப்பார். ஆனால், இடையே சட்ட மன்றத்தில் பெரும்பான்மையினர் அவரை நீக்க விரும்பினால் அவ்வாறு செய்ய, அவர்களுக்கு உரிமை உண்டு. அதாவது கவர்னர் என்பவர் மாநில சட்டமன்றத்துக்கு உட்பட்டவரே.

மாநிலத்தில், மக்களது நேரடி வாக்குகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட மன்றமே மிக உயர்ந்த ஜனநாயக அமைப்பு. அதற்கு மீறிய அதிகாரங்கள் கவர்னருக்கு இருக்கக்கூடாது. தனது அதிகார வரம்பிற்குட்பட்ட சட்டங்களைச் சட்டமன்றம் இயற்றுகிறது. அவற்றை நிறுத்திவைக்கவோ ஜனாதிபதியின் அனுமதிக்காகவோ, சம்மதத்திற்காக அனுப்பி வைக்கவோ, கையொப்பமிட மறுப்பதற்கோ, கவர்னருக்கு அதிகாரம் இருக்கக்கூடாது. இன்றுள்ள அரசியல் சாசனத்தில் இப்படிப்பட்ட அதிகாரங்கள் கவர்னருக்கு அளிக்கப்பட்டுள்ளன. இவற்றை நீக்கிவிட வேண்டும் என்கிறோம் நாம். கவர்னர் மூலம், மத்திய அரசு மாநிலத்தின் அரசியலில் தலையிடுவதற்கு இடமே இல்லாமல் செய்கின்றன நமது திருத்தங்கள்.

## 3. உயர் நீதிமன்றம்

இன்றுள்ள அரசியல் சாசனத்தில் ஒவ்வொரு மாநிலத்திலும் உள்ள உயர்நீதிமன்றத்தின் (ஹைகோர்ட்டின்) நீதிபதிகளையும் நிய மிக்கும் அதிகாரம் ஜனாதிபதியிடம் (மத்திய அரசிடம்) இருக்கிறது. அத்துடன் தலைமை நீதிமன்றத்தின் (சுப்ரீம் கோர்ட்டின்) நீதிபதி களை நியமிக்கும் அதிகாரமும் அவரிடமே உள்ளது. நமது திருத் தம் இந்நிலையை மாற்றுகின்றது. அந்தந்த மாநில உயர்நீதி மன் றத்துக்கு, நீதிபதிகளை நியமிக்கும் அதிகாரம் அந்தந்த மாநில அர சிடமே இருக்க வேண்டும்.

அது மட்டுமல்ல; அவ்வாறு செய்யப்படும் ஒவ்வொரு நிய மனமும் சட்டமன்றத்தின் பெரும்பான்மையினரது சம்மதத்தைப் பெற்றே செய்யப்பட வேண்டும். இந்த நியமனங்களை சட்டமன் றத்தின் ஜனநாயகக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர வேண்டும் என்கிறோம். அதுமட்டுமல்ல; சட்டமன்றத்தின் பெரும்பான்மை யினர் நீதிபதியை பதவி நீக்கம் செய்ய வேண்டும் என்று விண்ணப் பித்தால், கவர்னர் அதன்படி அந்த நீதிபதியை பதவி நீக்கம் செய்ய வேண்டும்

## 4. ஐ. ஏ. எஸ்.

ஒரு மாநிலத்தின் அரசுக்குத் தொடர்பான ஊழியப் பிரிவு கள் அனைத்தும், அந்த மாநில அரசின்கீழ், அதற்குக் கட்டுப் பட்டதாகவே இருக்கவேண்டும். இன்றுள்ள ஐ. ஏ. எஸ். போன்ற ஏற்பாடுகள் கூடாது. இந்த ஐ. ஏ. எஸ். அதிகாரிகள் அகில இந்திய ஊழியப் பிரிவைச் சார்ந்தவர்கள். அவர்கள் ஒரு மாநிலத் தில் வேலை செய்தாலும், இன்று அந்த மாநில அரசு, தேவைப் படும்பொழுது, அவர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்க முடியாது. மாநிலத்திற்குள், மாநில அரசு தொடர்பான வேலை களுக்கு இதுபோன்ற அகில இந்திய ஊழியப் பிரிவுகள் தேவையில்லை. மத்திய அரசு தொடர்பான வேலைகளுக்கு மட்டுமே அகில இந்திய ஊழியப் பிரிவுகள் இருக்கவேண்டும். மாநில அரசின்கீழ் வேலை பார்த்துக்கொண்டு மத்திய அரசிடம் விசுவாசம் காட்டும் ஏற்பாட்டுக்கு இடமிருக்கக்கூடாது.

## 5. சபைகள்

இந்தியக் கூட்டமைப்பில், எல்லா மாநிலங்களுக்கும் சமத்துவ அந்தஸ்தை உறுதி செய்யும் மற்றும் ஒரு ஏற்பாட்டையும் நாம் வற் புறுத்துகின்றோம். இந்திய நாடாளுமன்றத்தில் மக்கள்சபை என்றும், ராஜ்யசபை என்றும் இரண்டு அமைப்புகள் இருக்கின்றன. இன்று மக்கள்சபைக்கு நேரடியாக மக்களே பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக் கின்றனர். ராஜ்யசபைக்கு மாநில சட்டமன்றங்களில் உள்ள உறுப் பினர்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கின்றனர். அதிக மக்கள் தொகை உள்ள மாநிலத்தின் சட்டமன்ற உறுப்பினர்கள் அதிகமாக இருப்பர். எனவே, ராஜ்யசபை

யில் அந்த மாநிலத்துக்கு அதிகமான பிரதிநிதிகள் இருப்பர். சிறிய மாநிலத்துக்கு சிறிய அளவியேயே பிரதிநிதிகள் இருப்பர் இதனை நாம் அடியோடு திருத்த விரும்புகின்றோம்.

அ) மக்கள் சபையும், ராஜ்ய சபையும் சம அளவில் உறுப்பினர்களைக் கொண்டவையாக இருக்க வேண்டும்.

ஆ) ராஜ்ய சபையில்—பெரியது சிறியது என்ற வேறுபாடில்லாமல், ஒவ்வொரு மாநிலத்திற்கும் -சம அளவில் உறுப்பினர்கள் இருக்க வேண்டும். அதாவது 10 கோடி மக்களைக் கொண்ட உத்தரப்பிரதேசமானாலும், 1½கோடி மக்களைக் கொண்ட கேரளமானாலும், 4 கோடி மக்களைக் கொண்ட தமிழகமானாலும், அனைத்து மாநிலங்களுக்கும் சம எண்ணிக்கையில் உறுப்பினர்கள் இருப்பார்கள்.

இ) இரண்டு சபைகளாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டால் தான், எந்தச் சட்டமும் நிறைவேற்றப்பட்டதாகும்.

இந்த ஏற்பாடு மாநிலங்களின் சமத்துவத்தை நிலைநாட்ட உதவியாக இருக்கும்.

## 6. ஆட்சி மொழி

இந்தியக் கூட்டமைப்பின், மத்திய அரசின் ஆட்சிமொழியாக இந்தி இருக்கும் என்கிறது இன்றைய சாசனம்: இதனை முற்றிலும் நீக்கிட வேண்டும் என்கிறோம் நாம். நாம் இக் கட்டுரைத் தொடரில் ஏற்கனவே விளக்கியுள்ளபடி இந்தியாவில் பல தேசங்கள் உள்ளன. அந்த ஒவ்வொரு தேசத்துக்கும் ஒரு தேசியமொழி உண்டு. இவ்வாறு பல தேசிய மொழிகளைக்கொண்ட அமைப்பு இந்தியா. இதில் ஏதாவது ஒரு மொழிக்குக் கூடுதலான தனி அந்தஸ்து தருவது என்பது மிகத் தவறானது. பிற மொழிகளையும், அம் மொழிகளைப் பேசும் மக்களையும் இரண்டாந்தர அந்தஸ்துக்குத் தள்ளிவிடும். இவ்வாறு செய்வது எவ்வளவு விபரீதமான விளைவுகளை ஏற்படுத்தும் என்பதை நாடு ஏற்கனவே கண்டுள்ளது.

எனவே ஒவ்வொரு மாநிலத்திலும் அதன் மொழியே ஆட்சி மொழியாக இருக்கும். அதே சமயத்தில் மத்திய அரசின் அனைத்து தேசிய மொழிகளும் ஆட்சிமொழிகளாக இருக்கும். நாடாளுமன்றத்தில் எந்த மொழியிலும் பேச வாய்ப்பு இருக்கும். நாடாளுமன்றம் நிறைவேற்றும் சட்டங்கள் அனைத்துதேசிய மொழிகளிலும் வெளியிடப்படும். இவ்வாறாக மொழிகளின் சமத்துவம் என்பது உறுதி செய்யப்பட வேண்டும்.

## 7. அதிகாரப் பங்கீடு

யூனியன் பட்டியல் என்றும், ராஜ்யப்பட்டியல் என்றும், கூட்டுப்பட்டியல் என்றும்—மூன்று பட்டியல்களாக அதிகார

பிரிக்கப்பட்டிருக்கின்றன என்பதை நாம் ஏற்கனவே பார்த்தோம்.
இரண்டாவது பட்டியலான .ராஜ்யப் பட்டியல்தான் மாநிலங்
களுக்கு உரியது. இந்தப் பட்டியலுக்குள் அதிகமான அயிட்டங்களைக்
கொண்டு வருவது நமது நோக்கம்.

அதற்காக நாம் வைக்கும் ஆலோசனைகளாவன:

1) அரசியல் சாசனத்தின் 11—வது பகுதியில் உள்ள பிரிவு 248-ன் 1-வது உட்பிரிவு "ராஜ்யப்பட்டியலிலோ அல்லது கூட்டுப் பட்டியலிலோ இடம் பெறாத எதைப்பற்றியும் சட்டம் இயற்றும் அதிகாரம் நாடாளுமன்றத்துக்கே" என்கிறது. அதாவது, எஞ்சிய அதிகாரங்கள் அனைத்தும் மத்திய அரசுக்கே என்று பொருள். இதனை அடியோடு மாற்றுகிறோம். நாம். "யூனியன் பட்டியலிலோ அல்லது கூட்டுப்பட்டியலிலோ இடம் பெறாத எதைப் பற்றியும் சட்டம் செய்யும் உரிமை மாநிலங்களுக்கே" என்று நாம் இதனைத் திருத்துகிறோம்.

2) கூட்டுப்பட்டியலில் அனுவசியமாக 45 அயிட்டங்கள் வைக்கப்பட்டுள்ளன. இது வேண்டும் என்றே செய்யப்பட்டுள்ளது. இவ்வளவு அதிகாரங்களை இங்கு வைத்துள்ளதன் நோக்கம் தெளிவானது. (அ) மத்திய அரசு, தனக்கென்று ஒதுக்கிய தனிப்பட்டியல் போக, இவற்றிலும் கைவைக்க இடமளிக்கவே இந்த ஏற்பாடு (ஆ) கூட்டு பட்டியலில் உள்ளது தானே என்று. ஒரு மாநில அரசு இதில் உள்ளது பற்றிய ஏதாவது சட்டம் செய்தால், தனக்கும் தலையிட இடம் இருப்பதைக் கொண்டு, மாநில அரசு செய்ததைத் திருத்தவோ, நிராகரிக்கவோ மத்திய அரசுக்கு உரிமை அளிக்கவே இந்த ஏற்பாடு,

எனவே, இந்தக் கூட்டுப்பட்டியலை வெகுவாக வெட்டிக் குறைக்கவேண்டும். இதில் இருந்து எடுக்கப்படும் அயிட்டங்களை ராஜ்யப்பட்டியலில் சேர்த்துவிடவேண்டும் என்கிறோம். நாம். கூட்டுப்பட்டியலில் உள்ள 47 அயிட்டங்களில் கிட்டத்தட்ட பாதியை எடுத்து ராஜ்ய பட்டியலில் சேர்க்கவேண்டும். அவ்வாறு மாநிலப் பட்டியலுக்கு நாம் மாற்ற விரும்பும் அயிட்டங்களில் (அதிகாரங்களில்) முக்கியமானவை பின் வருமாறு:—

— தொழிற்சங்கங்கள், தொழில் தகராறுகள்.
— சமூக பாதுகாப்பு, சமூக இன்சூரன்ஸ்
— வேலை வாய்ப்பு, வேலை இல்லாமை
— தொழிலாளர் நலன், (வேலை நிலைமைகள், சேமிப்பு நிதி, தொழிலாளருக்கு நஷ்டஈடு, வயோதிக பென்ஷன்கள், மகப்பேறு உதவி நிதி ஆகியவை அடங்கும்)
— தொழிலாளர்களுக்கு வேலையில் பயிற்சி, தொழில் நுணுக்கப் பயிற்சி.
— வக்கீல்கள், டாக்டர்கள், இதர தொழில்கள்.
— உணவு, இதர பொருள்களில் கலப்படம்.
— அறங்கள், அறநிலையங்கள், சமயநிறுவனங்கள்

— பெரிய (மேஜர்) துறைமுகங்கள் என்று நாடாளு மன்றத்தால் அறிவிக்கப்படாத துறைமுகங்கள்

— ஆலைகள் (பாக்டரிகள்)

— மின்சாரம் (ஒரு மாநிலத்துக்குள் உற்பத்தியாகி விநியோகிப்படுவது மட்டும்)

— தினசரிப் பத்திரிக்கைகள், புத்தகங்கள், அச்சு இயந்திரங்கள்.

— அகில இந்திய முக்கியத்துவம் வாய்ந்தவை என்று நாடாளு மன்றம் அறிவிக்காத, எஞ்சிய புதை பொருள்களும், அவை உள்ள இடங்களும்.

— சுப்ரீம் கோர்ட் நீங்கலாக, இதர கோர்ட்டுகளை அமைத்தல்.

3) அடுத்து, யூனியன் பட்டியலில் உள்ள சில அதிகாரங்களையும், மாநிலப் பட்டியலுக்கு மாற்றிடவேண்டும்.

— ஆயுதங்கள், துப்பாக்கிகள், ரவைகள், வெடி மருந்துகள் என்ற தலைப்பில் அனைத்தும், இன்று யூனியன் பட்டியலில் உள்ளன. இவற்றிலிருந்து, சிறு ஆயுதங்கள் (ஸ்மால் ஆர்ம்ஸ்) என்பவற்றை—

(ரைபிள்கள், சுழல் துப்பாக்கிகள், போன்றவற்றையும்) அவற்றிற்கான ரவைகள், வெடி மருந்துகளையும் பிரித்து மாநிலப் பட்டியலுக்குக் கொண்டுவரவேண்டும்.

இன்று நாட்டின் பாதுகாப்புக்காகவும், போர் நடவடிக்கைகளுக்காகவும் அவசியம் என்று கருதப்படும் தொழில்களும், பொது நலனைக் கருதி மத்திய அரசின் கட்டுப்பாட்டில் இருக்கவேண்டும் என்று நாடாளுமன்றம் கருதும் தொழில்களும்—மத்திய அரசிடம் உள்ளன. இந்த சொற்றொடர்களுக்குள் சிக்காத தொழில்களே இல்லை எனலாம்! நாம் மூன்று விதமான தொழில்களைத் தவிர, பாக்கி அனைத்தும் மாநில அரசுகளிடமே இருக்கவேண்டும் என்று கருதுகிறோம். நூறு கோடி, ரூபாயும் அதற்கு மேலும் மூலதனம் தேவைப்படும் தொழில்கள் மத்திய அரசிடம் இருக்கவேண்டும். பெரிய ஆயுத தொழிற்சாலைகள் மத்திய அரசிடமே இருக்கவேண்டும். அதே போல் இரண்டு அல்லது மூன்று மாநிலங்களது கச்சாப்பொருள்களைக் கொண்டு—அல்லது ஒத்துழைப்புடன்தான் நடத்த இயலும் என்ற தொழில்களும் மத்திய அரசிடம் இருக்கவேண்டும். இவற்றை நீக்கி மற்ற அனைத்துத் தொழில்களும் மாநில அதிகார வரம்பிற்கு உட்பட்டே இருக்கவேண்டும்.

— தோட்டக் காடுகள் (தேயிலை, காப்பி, ரப்பர், ஏலம் போன்றவை.)

— சுரங்கங்கள். கனிவளங்களை அபிவிருத்தி செய்தல்.

— சுரங்கங்கள், எண்ணெய் வயல்கள் ஆகியவற்றில் விபத்துகளிலிருந்து பாதுகாப்பு; இவற்றில் தொழிலாளர் நலம்.

— உப்பு உற்பத்தியும் விநியோகமும்.

— சினிமாத் திரைப்படங்களுக்கு அனுமதி வழங்குதல்.

— செய்திப் பத்திரிக்கைகள் மீதும், அவற்றில் வரும் விளம்பரங்கள் மீதும் வரி விதித்தல்.

இவ்வாறாக, கூட்டுப் பட்டியலில், இருந்து பல அதிகாரங்களையும், யூனியன் பட்டியலில் இருந்து சில முக்கிய அதிகாரங்களையும் மாநிலப் பட்டியலுக்கு மாற்றிடவேண்டும் என்று நாம் வற்புறுத்துகின்றோம்.

## 8. நிதி வசதிகள்

மாநில அரசுதான், சமுதாயத்தின் அடிப்படைத் தேவைகளான கல்வி, மருத்துவ வசதி ஆகியவற்றைக் கவனித்து வருகிறது. இவை வளர்ந்துகொண்டே போகும் தன்மை உடையவை. மாநில அரசு ஊழியர்களுக்கும், ஸ்தல ஸ்தாபனங்களின் ஊழியர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் மத்திய அரசு ஊழியர்களுக்குக் கிடைக்கும் பஞ்சப்படி தரவேண்டும். விலைவாசிகள் உயர்ந்துகொண்டே போகும் கொள்கைகளின் விளைவாக இச்செலவு கூடிக்கொண்டே இருக்கும். தொழில் துறையிலும் வேளாண்மைத் துறையிலும் வளர்ச்சிகாண தேவையான செலவுகள் செய்தாகவேண்டும். இவைகளுக்குத் தேவையான நிதி வசதிகள் மாநில அரசுக்கு இல்லை. மாநிலங்களில் பற்றுக்குறை பட்ஜெட் என்பது மாமூலாகிவிட்டது. வருடா வருடம் மத்திய அரசிடம் கடன் வாங்குவதும், மான்யங்கள் கேட்பதும் மாநில அரசுகளுக்குத் தவிர்க்கமுடியாத வேலைகளாகிவிட்டன. இந்தக் கடன்களும் மிக அதிகமாக வளர்ந்துவிட்டன. அவைகளுக்கான வட்டியைக்கூட கட்ட முடியாமல் மாநில அரசுகள் வாயிதா கேட்பதையும் பார்க்கின்றோம்.

எக்சைஸ் வரி, சுங்க வரி, வருமான வரி, கம்பெனிகள் மீதான வரி ஆகியவை இன்று மத்திய அரசுக்கே கிடைக்கின்றன. இவைமூலம் கிடைக்கும் வருமானத்தில் மாநில அரசுகளுக்கு மிகவும் குறைவான அளவே கொடுக்கப்பட்டு வருகின்றது. சுங்கவரியிலிருந்து ஒரு பைசாகூட மாநில அரசுக்குப் பங்கு கிடையாது. எக்சைஸ் வரியிலிருந்து மாநிலங்களுக்கு சுமார் ஐந்தில் ஒரு பாகம்தான் கொடுக்கப்

படுகிறது. வருமானவரியிலிருந்தும் கம்பெனிகளிடம் வசூலாகும் வரியிலிருந்தும், இன்று 4-ல் ஒரு பங்குதான் மாநில அரசுகளுக்குத் தரப்படுகிறது. இந்த நிலையைப் பெரிதும் மாற்றவேண்டும். இந்த வரிகள் கொழுத்த வருமானத்தைத் தருபவை. இவைமூலம் கிடைக்கும் மொத்த வருவாயில் முக்கால் பங்கை மாநிலங்களுக்குத் தரவேண்டும். எந்த மாநிலத்துக்கு எவ்வளவு என்று நிர்மாணிக்க, பொருத்தமான—நியாயமான கோட்பாடுகளை வகுத்துக்கொள்ளலாம். ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு தடவை இந்தக் கோட்பாடுகளில் ஏதாவது மறுபரிசிலனை செய்ய வேண்டியிருந்தால், அதைச் செய்ய ஓர் உயர்மட்டக்குழு செயல்பட ஏற்பாடு செய்யலாம்.

1972, மார்ச் மாதம் நாடாளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்ட பட்ஜெட்டைப் பாருங்கள். எக்சைஸ் வரி மூலம் வரும் வருமானம் ரூ. 2074 கோடி. சுங்கவரி தரும் வருமானம் ரூ 534 கோடி. வருமான வரியும் கம்பெனிகள் தரும் வரியும் சேர்த்துக் கிடைப்பது ரூ. 902 கோடி. இவற்றின் மொத்தம் ரூ. 3510 கோடி. இன்றுள்ள ஏற்பாட்டின்படி இதிலிருந்து சுமார் ரூ. 640 கோடி தான் எல்லா மாநிலங்களுக்கும் பங்கிட்டுத்தர ஒதுக்கப்படுகிறது. நாம் சொல்லும் விதத்தில், இந்த ரூ. 3510 கோடியில் முக்கால் பங்கை மாநிலங்களுக்கு ஒதுக்கினால், அது ரூ 2600 கோடிக்குமேல் ஆகும். இதை மாநிலங்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தால் அவற்றின் நிதி நிலைமை பெரிய அளவு முன்னேற்றம் அடையும் என்பதில் சந்தேகம் இருக்க முடியாது. மாநில அரசுகள் "பிச்சைக்காரப் பிழைப்பு" நடத்த வேண்டியதில்லை!

# போராட ஒன்று படுவீர்!

இவ்வாறாக, நாம் கேட்கும் அதிகாரங்களையும், நிதி வசதிகளையும் மாநிலங்கள் பெறவேண்டும் என்றால், மத்திய அரசை எதிர்த்து, மாநில சுயாட்சி என்ற ஜனநாயகக் கோரிக்கையை ஆதரிக்கும் அனைத்து சக்திகளையும் ஒன்று திரட்டிப் போராட வேண்டும். இந்தப் போராட்டத்துக்கு, அனைத்து மாநிலங்களின் மக்களையும் ஒன்று திரட்டியாகவேண்டும்.

இந்த முக்கியமான பணியில், நாட்டில் உள்ள அனைத்து இடதுசாரி சக்திகளையும், ஜனநாயக சக்திகளையும் நம்முடன் ஒத்துழைக்க வருமாறு வேண்டுகிறோம்.

